# புதுமணப்பெண்



சரத்சந்திர சட்டர்ஜி

தமிழாக்கியவர் :

ஆர். ஷண்முகசுந்தரம்







மயிலாப்பூர் :: சென்னை-4.

# பங்கிம் சந்திரரின் நூல்கள்



இன்ப நிலைய வெளியீடுகள்



இனிப்பும் கசப்பும்
ராஜ சிம்மன்
சீதாராமன்
கபால குண்டலா
கணவனின் பரிசு
கிருஷ்ணகாந்தன் உயில்
ஆனந்த மடம்
மிருணாளினி
பங்கிம் சந்திரர் வாழ்க்கை வரலாறு
பங்கிம் சந்திரரின் இலக்கிய மேதை



## ரமேஷ் சந்திர தத்தரின் நூல்கள்



மாதவி கங்கணம்
மலர்ந்த உள்ளம்



## தாரா சங்கர் பானர்ஜி எழுதிய



வைகறை




# புதுமணப் பெண்!

சாகர்பூர் இன்று மிகக் கோலாகலமாக இருக்கிறது. கிராமம் முழுவதும் வாத்திய கோஷத்தினுல் மூழ்கிக் கிடக்கிறது. இந்த மாதிரி தடபுடலை இதற்கு முன் இந்தக் கிராமவாசிகள் கண்டதே இல்லை. வித விதமான வாத்தியங்களினுல் ஜனங்கள் மிகவும் ஆனந்த மடைந்தார்கள். ஆனுல், கிராமத்திலுள்ள கால்நடைகள் வெறுண்டன. மத்தளத்தின் கடபுடாவால் அவைகள் அடைந்த வேதனையைச் சொல்ல முடியாது.

இவ்வளவு பெரிய கொண்டாட்டத்திற்குக் காரணம் ஒரு பதினுறு வயதுப் பையனின் கல்யாணம்தான். சாகர்பூரின் ஜமீந்தாரான ஸ்ரீமான் ஹரதவ மித்ராவின் ஏக புதல்வனுடைய விவாகோற்சவத்திற்காகத்தான் இத்தனை ஏற்பாடுகளும். ஹரதேவர் ரொம்பப் பெரிய மனிதர். ஏறக்குறைய இருபத்தைந்து இருபத்தாராயிரம் வருஷ வருமானம் வருகிறது. பையன் பெயர் சத்தியேந்திர குமார் முத்ரா. ஹேயர் துரை பள்ளிக்கூடத்தில் என்டரன்ஸில் வாசித்துக் கொண்டிருக்கின்றுன். தனது புதல்வனின் கல்யாணத்தை ஜல்தியாகப் பார்க்க வேண்டுமென்ற தாயாரின் ஆவலினுல்தான் இவ்வளவு சிறிய வயதிலேயே கல்யாணம் நடக்கிறது!

தில்நாபூர் ஜமீந்தார் ஸ்ரீமான் காமக்யாசரண சௌத்ரியின் கனிஷ்ட புதல்வி சரளாவிற்கும் சத்தியேந்திரனுக்கும் திருமணம் இனிது நிறைவேறியது.

மனைவி நல்ல அழகுடையவள். சத்தியேந்திரன் மகிழ்ச்சி அடைந்தான்.

பத்து வயதான அழகிய மருமகளைக் கண்டு சத்தியேந்திரனின் தாயாரும் சந்தோஷமடைந்தாள்.

கல்யாணமான அடுத்த வருஷமே ஹரதேவபாபு மருமகளை அழைத்து வந்தார். மாமியாருக்கு மருகளைத் தாய் வீட்டிலேயே விட்டு வைக்கச் சம்மதமில்லை.

'கல்யாணத்துக்குப் பிறகு பெண்ணை தாய் வீட்டில் விட்டு வைத்திருக்கக்கூடாது' என்று அடிக்கடி சொல்லி வந்தாள். அவள் சொல்வதிலும் ஒன்றும் குற்றம் இல்லை.

சத்தியேந்திரனின் படிப்பை உத்தேசித்து ஹரதேவ பாபு குடும்ப சமேதராகக் கல்கத்தாவில் வசிக்க வேண்டி இருந்தது. சரளாவும் கல்கத்தாவுக்கே வந்துவிட்டாள். சிறு பெண்ணானதினால் மாமனாரிடம் கூட பேசுவாள். இதனால் மாமனாருக்கு ரொம்ப சந்தோஷம்.

சில நாளைக்கப்புறம் காமக்ய பாபு சரளாவை அழைத்துக்கொண்டு போனார். இதற்கு இரண்டொரு மாதத்திற்கப்புறம் ஒரு நாள் சத்தியேந்திரன் கோபமாக "புஸ்தகமெல்லாம் தூசி படிந்து கிடக்கிறதே. மைக் கூட்டில் மை கிடையாது. இதையெல்லாம் பார்த்துக் கொள்வதற்கு வீட்டில் ஒருவரும் இல்லையா?" என்றான்.

தாயார் விஷயத்தை அறிந்து கொண்டாள். ஹரதேவ பாபு காதிற்கும் எட்டியது. அவர் சிரித்துவிட்டு ஒரு ஆள் வசம், "இங்கு வீட்டில் பெரிய உபத்திரவமாக இருக்கிறது. மருமகள் வராமல் இதெல்லாம்

அடங்காது. ஆகையால் உடனே அனுப்பிவையுங்கள்" என்று கடிதம் எழுதிக் கொடுத்தனுப்பினர்.

சரளா வந்து சேர்ந்தாள். சத்தியேந்திரனுடைய சிறிய வேலைகளை எல்லாம் அவள் கவனித்துக் கொண்டாள். புஸ்தகங்களையெல்லாம் தூசி போகத் துடைத்து நன்கு அடுக்கி வைத்தாள். காலேஜுக்குப் போட்டுப் போகும் ஆடைகளைச் சீர்படுத்தி வைத்தாள். அவசரத்தில் "கப் பட்டன்" போடாமல் விடுவது, சாப்பாட்டில் நேரம் செய்வது, கலாசாலைக்கு நேரம் கழித்துப் போவது, வெளுத்த சொக்காய் மேல் அழுக்குத் துணிகளை எடுத்துப் போட்டுக் கொள்வது முதலிய காரியங்கள் எல்லாம் நடைபெருமல் சரளா கவனித்து வந்தாள். சரளா இல்லாவிட்டால் அடிக்கடி இம்மாதிரி நேர்ந்து விடுவது உண்டு. அவன் ரொம்ப மறதி பிடித்தவன். இவைகள் எல்லாம் சரளாவைத் தவிர வேர் யார் செய்தாலும் அவனுக்குப் பிடிக்காது. ஆகையால், சரளாவே அனைத்தும் செய்ய வேண்டியிருந்தது.

சுசீலா, சரளாவினுடைய தமக்கை. அவளுடைய குழந்தைக்கு அன்னப்பிரஸ்தானம் நடப்பதால் காமக்ய பாபு, சரளாவை அழைத்துப் போவதற்காக கல்கத்தா வந்து சேர்ந்தார். சுசிலா, சரளாவையும் சத்தியேந்திரனையும் வரும்படி வற்புறுத்திக் கடிதம் எழுதி இருந்தாள். சரளா ஏறக்குறைய மூன்று வருஷமாக தில்லூர் போகவில்லை. சத்தியேந்திரனும் வரச் சம்மதிக்கவே காமக்ய பாபு மிகச் சந்தோஷத்துடன் மாப்பிள்ளையையும், மகளையும் அழைத்துக் கொண்டு ஊருக்கு வந்தார்.

சரளாவினுடைய தாயார் ரொம்ப நாளைக்குப் பிறகு மகளையும், மருமகனையும் கண்டு அதிகம் ஆனந்தம் அடைந்தாள்.

சுப காரியம் முடிந்த பிறகு சத்தியேந்திரன் ஊருக்குப் புறப்பட விரும்பினுன். ஆனல் மாமனர் தடுத்து, "ரொம்ப நாளைக்கு அப்புறம் வந்திருக்கிருய். இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்கத்தான் வேண்டும்" என்ருர்.

சரளாவும் விடவில்லை. இரண்டு மூன்று நாளிருப்பதற்குச் சத்தியேந்திரனும் சம்மதித்தான். இரண்டு மூன்று நாட்களும் சென்றுவிட்டன. ஆனாலும், சரளாவிற்கு விட மனதில்லை. போகாமலும் இருக்கமுடியாது. படிப்புக் கெட்டுவிடும். பரிட்சைக்கு அதிக நாளிருக்கவில்லை. புறப்படும்போது சரளா, "என்னை எப்போது வந்து அழைத்துப் போகிறீர்கள்?" என்றாள்.

"உனக்கு இஷ்டமானபோது." "பத்துப்பன்னிரெண்டு நாளைக்கப்புறம் வந்து அழைத்துப் போக வேண்டும்."

சத்தியேந்திரன் மிகுந்த ஆனந்தமடைந்தான். அவன் இதை எதிர்பார்க்கவில்லை! மறுபடி சரளா கண்ணீருடன், "என்னையே நினைத்துக்கொண்டு இருந்து விடாதீர்கள். இரவு பகலாகப் படித்து நோயிலும் விழுந்து விடாதீர்கள்" என்றாள்.

இரவு பத்து மணிக்கு மேல் படிக்கக் கூடாதென தன் ஆணையாக உறுதி வாங்கிக்கொண்டாள். ஏனோ மிகுந்த கவலையடைந்த மனதுடன் சத்தியேந்திரன் கல்கத்தா வந்து சேர்ந்தான். சத்தியேந்திரன் ஒரு புஸ்தகத்தின் பக்கங்களோடு மனம் துவந்த யுத்தம் செய்ய ஆரம்பித்தது.

சத்தியேந்திரன் கணக்கிட்டுப் பார்த்தான். பகல் முழுவதும் அவன் இருபத்து ஆறு வரிகள் தான் படித்திருந்தான். 'ஐயோ, இப்படிப் படித்தால் பாஸ் ஆக முடியுமா?" என்று அவன் வருத்தப்பட்டான். படிப்படியாக சாதாரண துக்கம் கோபமாக மாறியது. இதெல்லாம் அந்தக் குறும்புக்காரச் சரளாவின் குற்றம். ஊரிலிருந்து வந்து இன்று ஐந்து நாளாகி விட்டது. கொஞ்சம் கூடப் படிக்க முடியவில்லையே! அவளிருந்தால் பத்து மணிக்கு மேல் படிக்க முடிவதில்லை. விளக்கை அணைத்து விடுகிறாள். அவளை எங்கேயாவது அனுப்பிவிட்டு நன்றாகக் படிக்கலாமென நினைத்தேன். ஆனால், அதற்கு நேர்மாறாக நடந்து விட்டதே!

நாளையே அவளை அழைத்து வரவேண்டும். வீண் வெட்கப்பட்டு என்ன செய்வது" என்று நினைத்தான்.

அவளைக் கூட்டி வருவதற்காக சத்தியேந்திரன் ஒரு உபாயம் தேடிக்கொண்டிருந்தான். எப்படிச் சொல்வது, சொல்ல வெட்கமாயிருக்கிறதே. அவளிடம் இவ்வளவு அன்பு எப்படி ஏற்பட்டது?

இதற்குள் வேலைக்காரன் வந்து ஒரு தந்தியைக் கொடுத்தான். சத்தியேந்திரன் திடுக்கிட்டான். இது எங்கிருந்து வந்திருக்கிறது என்று யோசிப்பதற்கு நேர மில்லை. உறையைக கிழித்ததும் சத்தியேந்திரன் இதயம் நடுங்கியது. உள்ளே எழுதி இருந்த விஷயத்தால் தலை சுழன்றது. சரளா நோயுற்றிருக்கிருள்.

அன்றே ஹரதேவ பாபு சத்தியேந்திரனைக் கூட்டிக் கொண்டு தில்லுனூர் புறப்பட்டார். வீட்டுக்கு முன்னலேயே காமக்ய பாபுவைச் சந்தித்தார். "பெண் ணுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" என்று ஹரதேவ பாபு உரக்கக் கேட்டார்.

ஹரதேவ பாபு உள்ளே சென்று பார்த்தார். சரளா வயிற்று வலியால் பீடிக்கப்பட்டிருந்தாள். ஒரு நாளைக் குள் அவளை அடையாளமே தெரியவில்லை. கண் குழி விழுந்திருந்தது. தாமரை போன்ற முகம் கறுத்து விட்டது. நிலைமை கவலைக்கிடமானது என்று அனுப வஸ்தரான ஹரதேவ பாபு அறிந்துகொண்டார். கண ணைத் துடைத்துக் கொண்டு, "அம்மா சரளா!" என்ருர். சரளா கண்ணைத் திறந்து பார்த்தாள். அது வரையிலும் அவளுக்கு சுயப்பிரக்ஞை இருந்தது.

"உடம்பு எப்படி இருக்கிறது அம்மா?"

சரளா சிரித்துக்கொண்டு, "நன்ருகத்தானிருக் கிறது" என்ருள்.

தங்களுக்குள் பிரிவு காலம் வந்துவிட்ட தென்று இருவரும் அறிந்து கொண்டார்கள். எல்லோரும்

சென்ற பிறகு சத்தியேந்திரன் வந்து அருகில் உட்கார்ந்து கொண்டான். தாங்க முடியாத துக்கத்தால் அவனுல் பேச முடியவில்லே. பிறகு, அதிக சிரமத்துடன் 'சரளா' என்று அழைத்தான்.

உலர்ந்து ஓய்ந்துபோன குரலா? அதில் சந்தேகம் என்ன? வாழ்க்கையில் பழக்கப்பட்ட குரல்தான்—அதுதான்; அன்பின் அழைப்பு—சரளா! இதில் என்ன சந்தேகம் இருக்க முடியும்? சரளா கண்ணைத் திறந்து பார்த்தாள். ஹரதேவைப் பார்த்ததுமே சத்தியேந்திரனும் வந்திருப்பான் என்று ஊகித்துக் கொண்டிருந்தாள். சரளாவிற்குக் கணவனிடம் வேடிக்கை செய்வதில் மிகுந்த பிரியம். அவள் சிரித்துக்கொண்டு, "என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்?" என்ருள்.

அவனுல் பேச முடியவில்லே; இதுவரையிலும் எப்படியோ கண்ணீரைத் தடுத்து வைத்திருந்தான். சரளாவின் நிலேயைக் கண்டதும் அவனுடைய அந்தக் கரை உடைந்துவிட்டது. இந்தச் சமயத்தில் அழக்கூடாது என்பது சத்தியேந்திரனுக்குத் தெரியும். ஆனுல், கரிக்கும் கண்களுக்கு அவ்வளவு புத்தி ஏது? கண்ணீர்த் துளிகள் மெள்ள மெள்ள சொட்டுப் போட ஆரம்பித்தன. அவைகள் இன்று சரளாவின் அங்கத்தோடு கலக்கப் போகின்றன. இம்மாதிரி சந்தர்ப்பம் அவைகளுக்கு எப்போதாவது கிடைத்திருக்கிறதா? எப்போதும் கிடைத்ததில்லே. அவனுக்காகவோ அல்லது சரளாவுக்காகவோ அவைகள் இம்மாதிரி சந்தர்ப்பத்தை நழுவவிடுமா? சரளா எப்போதும் புருஷன் அழுததைக் கண்டதில்லே. அவளும் அழுதாள். வெகு நேரத்திற்கப்புறம் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "ச்சீ, ஏன் அழுகிறீர்? ஆண்கள் அழுவார்களா?" என்ருள்.

"என்ன? சரி, தெரிந்து கொண்டேன் சரளா! மனே வேதனேயால் காய்ந்து கல்லாய்ப் போனுலும் ஒரு துளிக் கண்ணீர்கூட வெளியில் வரக்கூடாது?

கண்ணீர் விடுவது பெண்களுக்கானது, ஆண்களுக்கு ஏற்றதல்ல! அந்தரங்கமாக வேதனையை அனுபவி. ஆனால், அழாதே; அழுதால் பெண்ணாய் விடுவாய்! சரளா, இந்த சாஸ்திரம் நீங்கள் செய்ததா?''

சரளா கணவனது கையைப் பிடித்துக்கொண்டு அதை அழுத்தியபடியே, அழுதுகொண்டு, "மறு ஜன்மத்தை நம்புகிறீரா?'' என்றாள்.

சத்தியேந்திரன் துக்கத்துடன், "அதென்னவோ! ஆனால், இன்றிலிருந்து பூராவும் நம்புகிறேன்.''

சரளாவின் முகத்தில் சிறிது சிரிப்பின் ஒளி ஓடிப் படர்ந்தது. மருந்து கொடுக்கும் வேளை வந்தவுடன், காமக்ய பாபு, ஹரதேவ பாபு, டாக்டர் முதலியவர்கள் உள்ளே பிரவேசித்தார்கள். டாக்டர் நாடியைப் பார்த்து விட்டு, "ஒன்றும் சொல்லமுடியாது. அப்புறம் அவன் செயல்?'' என்றார். அவன் செயல்படியே அடுத்த நாள் காலை ஏழு மணிக்கு சரளா மரணமடைந்தாள். சாயந்திரம் ஹரதேவ பாபு, சத்தியேந்திரனை அழைத்துக் கொண்டு கல்கத்தா திரும்பினார்.

"இப்படி நடக்குமென்று யார் நினைத்தார்கள். அம்ச தூளிகா மஞ்சத்தில் சயனித்துக்கொண்டு இந்திர போகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன். யாரோ பலவந்தமாக அப்புறப்படுத்தி அந்தச் சுகத்தை பாழ் படுத்தி விட்டார்களே! நடுச் சாமத்தில் எழுந்து உட் கார்ந்து கொள்கிறேன். தூக்கம் கலைந்து விடுகிறது. எனது வாழ்க்கைத் துணைவியின் இடம் காலியாகிக் கிடக்கிறது. நான் அழுவதா சிரிப்பதா? இன்ப வெள்ளத்திலே நீந்திக் கொண்டிருந்தேன். திடீரென எந்தச் சுழலிலோ அகப்பட்டுக்கொண்டேனே! இனி அப்படி நீந்திச் செல்லமுடியுமா? எல்லாம் எப்படியோ மாறிப் போய்விட்டதே! வாழ்க்கையிலிருந்து யாரோ அப்புறப் படுத்திவிட்டார்களே! ஒன்றும் புலப்படவில்லையே! ஐயோ, இப்படியா முடியவேண்டும்!''

இருண்ட இரவிலே சத்தியேந்திரன் ஜன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு சாகர்புரத்தின் அந்த காரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். மரம் செடி கொடிகளும் சந்தடியற்று சத்தியேந்திரனிடம் மௌன பாஷையில் பேசிக்கொண்டிருந்தன.

குளுகுளுவென தென்றல் வீசிச் சென்றது ஏதாவது சொல்லியதா? சொல்லாமலா இருக்கும்! அந்த ஒரே வார்த்தைதான்! எல்லா வஸ்துக்களும் அந்த ஒரே வார்த்தையைத்தான் சொல்லிக்கொண்டிருந்தன. 'எப்படி முடிந்துவிட்டது.' மைனுக்குருவி இப்போது 'கிக்கிக்கீ' என்று கத்துவதில்லை. அதற்கு மாருக, "ஐயையோ! செத்துவிட்டாளே" எனக் கத்துகிறது. 'மனைவி இறந்துவிட்டாள்' என்றே புருக்கள் பேசிக் கொள்கின்றன. அனைத்தும் இதையே கூறிக்கொண்டு இப்படி ஏன் அலைகின்றன? குளுகுளு என்று வீசிச் செல்லும் தென்றல் கூடவா இதையே சொல்லிப் போக வேண்டும்!

உடம்பு எப்படி இருக்கிறது சத்தியேன்? தலையை வலிக்கிருப்போலிருக்கிறதா? அதுதான் ரொம்ப நாளாகிவிட்டதே! கொஞ்சம் தூங்கமாட்டாயா அப்பா? சதா இவ்விதமே இந்த ஜன்னலருகிலேயே உட்கார்ந்து கொண்டிருப்பாயா? சத்தியேந்திரன் இருளில் நட்சத்திரங்களைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவைகளில் சற்று மங்கலாக இருந்த நட்சத்திரத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனல் கண்மூட முடிவதே இல்லை. எங்கேயாவது அது மறைந்துவிட்டால் என்ன செய்வது? பார்த்துப் பார்த்து களைப்படைந்த பிறகு அங்கேயே படுத்துக்கொள்வான். காலையில் கண் விழித்ததும் மறுபடியும் அதைப் பார்ப்பதற்கு முயற்சிப் பான்.

இப்போது வெளிச்சத்தைக் கண்டால் அவனுக்குப் பிடிப்பதில்லை. சந்திரிகையிலே அவனுக்கு ஆனந்தம் உண்டாவதில்லை. அந்த மங்கிய நட்சத்திரம் இத்தனை வெளிச்சத்தில் தெரியவா போகிறது!

சத்தியேந்திரன் எம்.ஏ.யில் தேறவில்லை. தேற வேண்டும் என்ற விருப்பம்கூட அவனுக்குக் கிடையாது. உற்சாகம்தான் இப்போது போய்விட்டதே. "பாஸ்" ஆவதால் நட்சத்திரம் அருகில் வந்துவிடவா போகிறது?

ஹரதேவ பாபு இப்போது குடும்பத்துடன் சொந்த ஊருக்கே வந்துவிட்டார். வீட்டிலிருந்துகொண்டே நன்கு பரிட்சை கொடுத்துவிடலாம் என்று சத்தியேந்திரன் சொல்கிறான். நகரத்தின் கூச்சலிலே படிக்க முடிவதில்லையாம். சத்தியேந்திரன் மிகவும் மாறிப்போய் விட்டான். அவன் முகத்தைப் பார்த்தால், ரொம்ப நாளாகச் சாப்பிடாதவனைப் போலவோ அல்லது பெரிய நோயிலிருந்து இப்போதுதான் எழுந்தவன் போலவோ தெரிகிறது.

மத்தியானத்தில் சத்தியேந்திரன் அறையைத் தாழிட்டுக்கொண்டு படத்தை எடுத்து துடைத்து வைப்பான். ஹார்மோனியத்தை எடுத்து 'பொய்ப் பொய்யாக' சுத்தம் செய்வான். சரளாவின் புஸ்தகங்களை எடுத்து நன்கு அடுக்குவான். நல்ல நல்ல கடிதங்களில் சரளாவிற்கு கடிதம் எழுதுவான். ஏதோ விலாசம் எழுதி தன் பெட்டியில் வைத்துப் பூட்டிக்கொள்வான்.

சத்தியேந்திரா! நீ ஒருவன் மட்டும் அல்ல; உன்னைப் போலவே பலருக்கு இம்மாதிரி துரதிருஷ்டம் நேர்ந்திருக்கிறது. எல்லோரும் உன்னைப் போலவே பைத்தியமாகி விடுகிறார்களா?

சத்தியேந்திரா, ஜாக்கிரதை! அனைத்திற்கும் ஒரு முடிவு உண்டு. உனது காதலுக்கும் கூட ஒரு எல்லை இருக்கிறது. எல்லையைக் கடந்தாயானால் கஷ்டமடைவாய். யாரும் எதையும் சாசுவதமாக வைத்துக்கொள்ள முடியாது.

சத்தியேந்திரனுடைய தாயார் ரொம்பப் புத்திசாலி. ஒரு நாள் தன் கணவனிடம், "நம்ம சத்தியேந்திரன் எப்படி மாறிவிட்டான் பார்த்தீர்களா?" என்றாள்.

“பார்த்துக்கொண்டுதானிருக்கிறேன். ஆனால், என்ன செய்வது?”

“வேறு கல்யாணம் செய்து வையுங்கள். ஒரு நல்ல மனைவி கிடைத்துவிட்டால் சத்தியேன் மறுபடியும் சிரித்துப் பேச இருப்பான்.”

அன்று சத்தியேன் சாப்பிடும்போது தாயார், “ஒன்று சொல்கிறேன், கேட்கிறாயா, அப்பா?” என்றாள்.

“சொல்லு.”

“நீ, கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்.” சத்தியேந்திரன் சிரித்துவிட்டு, “இதுதானா விஷயம்! ஆனால், இந்த வயதில் இதெல்லாம் என்ன?” என்றான்.

தாயார் முதலிலேயே கண்ணீரைத் தயாராக வைத்திருந்தாள். அவள் பேசாமல் கண்ணீர்விடத் தொடங்கினாள். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, “அப்பா. இருபத்தியொரு வயது என்ன சிறிய வயதா? ஆனால் சரளாவை நினைத்தால் இதை எல்லாம் பேசவே மனம் வருவதில்லை. ஆனால், என்னாலும் தனியாக இருக்க முடியாது.” என்றாள்.

அடுத்த நாள் ஹரதேவபாபுவும், சத்தியேந்திரனை அழைத்து இதே விஷயத்தைத் தெரியப்படுத்தினார். சத்தியேந்திரன் ஒன்றும் பேசவில்லை. மௌனம்,பூர்ண சம்மதந்தான் என்று ஹரதேவபாபு தெரிந்துகொண்டார்.

சத்தியேந்திரன் தன் அறைக்கு வந்து சரளாவின் படத்தெதிரில் நின்றுகொண்டு, “கேட்டாயா சரளா, எனக்குக் கல்யாணமாம்!” என்றான்.

படம் பேசுமா? பேசக்கூடுமானால் என்ன சொல்லும்? ‘சந்தோஷம்’ என்பதைத் தவிர வேறு என்ன சொல்லும்?

* * *

இந்தத் தடவை சத்தியேந்திரனுக்குக் கல்கத்தாவில் விவாகம் நடந்தது. 'சுபதிருஷ்டியின் போது பெண்ணின் முகம் அழகாய் இருப்பதைக் கண்டான். விட்டுத் தள்ளு அழகை! 'தலைமீது ஒரு சுமை ஏறியதாக' நினைத்துக்கொண்டான்.

கல்யாணத்திற்கப்புறம் இரண்டு வருஷம் வரையிலும் நளினி தாயார் வீட்டிலேயே இருந்தாள். மூன்ருவது வருஷம் கணவன் வீட்டிற்கு வந்தாள். மாமியார் புது மருமகளின் அழகிய முகத்தைக் கண்டு சரளாவை மறக்க முயன்ருள். அன்றிலிருந்து நளினி வீட்டு எஜமானியாகிவிட்டாள். ஆனல், சத்தியேந்திரனும், நளினியும் தனித்திருக்கும்போது கூட பேசிக்கொள்வதில்லை.

'இவ்வளவு திரஸ்காரம் ஏன்?' என்று நளினி நினைத்தாள்.

'யாரோ இவள் எனது சரளாவின் இடத்தில் வந்து படுத்துக்கொண்டாளே' என்று சத்தியேந்திரன் நினைத்துக்கொண்டான். புது மனைவி வெட்கத்தால் பேச முடியவில்லை. ஆனல், சத்தியேந்திரனே 'பேசாமலிருப்பதே நல்லது' என்று நினைத்துக்கொண்டான்.

ஒரு நாளிரவு சத்தியேந்திரன் கண் விழித்துப் பார்த்தான். அருகில் யாரும் இல்லாதது தெரிந்தது. நன்ருகக் கவனித்தான். திறந்திருந்த ஜன்னலருகே யாரோ உட்கார்ந்திருப்பது தெரிந்தது. சந்திரிகை திறந்திருந்த ஜன்னல் வழியாக வந்துகொண்டிருந்தது. அந்தப் பிரகாசத்திலே சத்தியேந்திரனுக்கு நளினியின் முகம் கொஞ்சம் தெரிந்தது. தூக்கக் கலக்கத்தில், சந்திரிகையில் அவளுடைய முகம் ரொம்ப அழகாக விளங்கியது.

நளினி அழுவதை அவன் காது கொடுத்துக் கேட்டான்.

"நளினி" என்று அவன் கூப்பிட்டான். நளினி திடுக்கிட்டாள். கணவஞ அழைப்பது? மெதுவாக அருகில் வந்து உட்கார்ந்தாள்.

"ஏன் அழுகிருய்?" என்று சத்தியேந்திரன் கேட்டான்.

கண்ணீர் இரு மடங்காகப் பெருகியது. அவள் இன்றுதான் கணவனுடைய அன்பான வார்த்தையைக் கேட்டாள்.

வெகு நேரம் வரையிலும் விக்கி விக்கி அழுதுவிட்டு கண்ணைத் துடைத்துக்கொண்டு மெதுவாக, "உங்களுக்கு என்னைப் பார்க்க ஏன் பிடிப்பதில்லை?" என்ருள்.

சத்தியேந்திரனுக்குக்கூட ஏனே அழவந்துவிட்டது. அவன் அடக்கிக்கொண்டு, "பார்க்கப்பிடிப்பதில்லையா? உன்னிடம் யார் சொன்னது? உன்னை நாடுவதில்லை, அதென்னவோ வாஸ்தவம்தான்" என்ருன்.

நளினி பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

சத்தியேந்திரன் சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு, "இந்த விஷயத்தை யாரிடமும் சொல்லக்கூடாதென இருந்தேன். சொல்லாமல் இருப்பதும் பிரயோசனமில்லை. உன்னிடம் ஒன்றையும் மறைக்கப் போவதில்லை. நான் ஏன் இப்படி இருக்கிறேன் என்பதைச் சொன்னல் தெரிந்துகொள்வாய். நான் இப்போதுகூட சரளாவை—எனது முதல் மனைவியை மறக்க முடியவில்லை. மறந்துவிடுவேன் என்றும் கூற முடியாது. மறக்கவும் எனக்கு விருப்பம் இல்லை. நீ ஒரு துர்ப்பாக்கியனின் கையைப் பிடித்துவிட்டாய். நான் உனக்கு மகிழ்ச்சியூட்ட முடியுமா என்பது சந்தேகம். நான் என் இஷ்டப்படி உன்னைக் கலியாணம் செய்துகொள்ளவில்லை. ஆகவே மனப்பூர்வமாக உன்னைக் காதலிக்கவும் முடியாது" என்ருன்.

இருண்ட இரவிலே இருவரும் வெகு நேரம் இவ் விதமே உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். நளினி அழுவதை சத்தியேந்திரன் அறிந்து கொண்டான். அவனும் அழுதானு? ஒவ்வொன்ருக சரளாவின் விஷயங்கள் நினைவுக்கு வரத் தொடங்கின. மெள்ள மெள்ள அவனுடைய இதயத்திலிருந்து அவளது முகம் எழுந்தது. 'என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள் ?" என்று கேட்டது ஞாபகத்துக்கு வந்தது. அவனே அறியாமல் கண்ணீர் பெருக்கெடுத்துப் பார்வையை மறைத்தது. அதற்கப்புறம் அவன், சோர்ந்துபோய்க் கீழே சாய்ந்தான்.

சத்தியேந்திரன் கண்ணைத் துடைத்துக்கொண்டு மெதுவாக நளினியின் இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு, "அழாதே நளினி! நான் என்ன செய்யட் டும். இரவு பகலாக நான் உள்ளுக்குள்ளேயே எத்த கைய வேதனையை அனுபவிக்கிறேன் தெரியுமா? மனதிலே இருக்கும் இந்தத் துக்கம் ஒருக்கால் அகன்ற தானுல் உன்னை காதலிக்கக் கூடும்; அப்போது உன் னிடம் அன்பாக இருப்பேன்" என்ருன்.

இந்தக் கலங்கிய அன்பின் வேண்டுகோளை எத்தனை பேர் கிரகித்துக் கொள்வார்கள். நளினி ரொம்பப் புத்திசாலிப் பெண். அவள் கணவனுடைய துக்கத்தை அறிந்துகொண்டாள். கணவன் தன்னை நேசிப்ப தில்லை என்பதை அவன் வாயாலேயே கேட்டாள். ஆனுல்கூட அவள் கோபம் கொள்ளவில்லை. அப்பாவிப் பெண்! இந்த வயதிலே கோபமடையாதவள் இனி எந்த வயதில் கோபமடையப் போகிருள்! சண்டை யிடுவது பெரிதா, கணவன் பெரியதா என்று நளினி யோசித்தாள்.

அன்றையிலிருந்து அவளுக்குக் கணவனுடைய துக்கத்தைப் போக்குவது எப்படி? என்ற கவலையாகவே போய்விட்டது. 'என்ன செய்தால் மூத்தாளைக் கணவன் மறப்பார்?' என்ற விஷயத்தை யோசிக்காத நேரம் கிடையாது. துக்கப்படுபவர்களுக்கு அன்புடன் செவி

சாய்ப்பதைப் போன்று ஆறுதலளிக்கும் மருந்து உலகத்திலே வேறு கிடையாதல்லவா ?

இதற்கப்புறம், சத்தியேந்திரன் அடிக்கடி தனது முதல் மனைவியைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தான். எத்தனையோ இரவுகள் இருவரும் அந்த ஒரே விஷயத்தைப் பேசிக்கொண்டிருந்தார்கள். சத்தியேந்திரன் மட்டும் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. நளினியும் விருப்பத்துடன் கேட்டுக்கொண்டிருந்தாள்.

* * *

இரண்டு வருஷம் சென்றுவிட்டது. நளினிக்கு இப்போது பதினெட்டு வயதாகியது. அவளுக்கு இப்போது முந்திய கஷ்டங்களொன்றுமில்லை. கணவன் அவளை அனாதரவு செய்வதில்லை. கணவனின் பிரியத்தை அவள் பலவந்தமாகச் சம்பாதித்துக் கொண்டாள். பலவந்தமாக அப்படி அபகரித்துக் கொள்கிறவர்களுக்கு அதைக் காப்பாற்றவும் தெரியுமல்லவா ? இப்போது அவளுக்கு ஒரு கஷ்டமும் இல்லை. சத்தியேந்திரன் டிப்டி மாஜிஸ்ட்ரேட்டாக இருக்கிறான். மனைவியின் அன்பால் அவன் எவ்வளவோ மாறிப் போய்விட்டான். கச்சேரி வேலைக்குப் பிறகு நளினியோடு உட்கார்ந்து கொண்டு சம்பாஷிப்பான், வேடிக்கை செய்வான், பாடக் கேட்டு பரவசமடைவான். ஒரு வாக்கியத்தில் சொல்லப் போனால் சத்தியேந்திரன் வேறு மனிதனாகிவிட்டான். மற்றவர்களுக்குக் கிடைக்காத பாக்கியம் அவனுக்குக் கிடைத்து விட்டது.

மனித சரித்திரமே இம்மாதிரிதான். நீ சாந்தியற்று இருக்கிறாய். சாந்திக்காக அலைகிறாய். நான் சாந்தியுடன் நாளைக் கழிக்கிறேன். ஆனாலும், எங்கிருந்தோ சஞ்சலத்தையும் வரவழைத்துக் கொள்கிறேன்.

கபடத்தனம் மனிதனுடைய இயற்கையான குணம் போலும். ஓடிப்போகும் மீன் அப்படியே தப்பித்துக் கொள்கிறதா? சத்தியேந்திரனும் மனிதன்தான். மனித சுபாவம் எங்கே போய்விடும்? இத்தனை அன்பிலும்

சாந்தியிலும் கூட அவன் இதயத்திலே ஒவ்வோர் சமயம் சஞ்சலம் மின்னல்போல் பளிச்செனச் சுளித்தது.

ஒரு நொடிக்குள் அவன் மனதில் உள்ளே எழும் அந்த மின்வெட்டை, கொந்தளிப்பைச் சரிப்படுத்து வதற்குள் நளினிக்குப் போதும் போதுமென்றாகிவிடும். இனி அதைச் சமாளிக்க முடியாது என்று கூட அவள் எண்ணுவாள். இத்தனை நாளைய சலியாத உழைப்பும் வீணாகிப்போய் விடுவதா ?

நளினி துளி முகம் கோணுவதைக் கண்டாலும், 'சரளாவாக இருந்தால் இம்மாதிரி நடப்பாளா ?' என்று நினைத்துக்கொள்வான். நடப்பாளோ நடக்கமாட் டாளோ அது பகவானுக்குத்தான் தெரியும். நடக்காது மிருக்கலாம், இதைவிட நான்கு மடங்கு அதிகமாகவும் நடக்கலாம். இவைகளினால் ஆவது என்ன? அந்த மீன்தான் ஓடிவிட்டதே! சத்தியேன் இன்னும் சரளாவை மறந்துவிடவில்லை. கச்சேரியிலிருந்து வந்ததும் அவனுக்கு நளினி தென்படாவிட்டால் உடனே அவன் 'அவளைப்போல் இவள் ஆவாளா' என்று நினைத்துக் கொள்வான்.

நளினி மிகுந்த புத்திசாலிப் பெண். எப்போதும் கணவன் அருகிலேயே இருப்பாள். இன்னும் கணவன் சரளாவை மறக்கவில்லை என்று அவளுக்குத் தெரியும். ஓரேடியாக மறந்துவிட வேண்டுமென்று அவள் விரும் பியதும் கிடையாது.

வீணாக ஞாபகப் படுத்திக் கொண்டு கஷ்டமடை கிறாரே என்ற கவலை நளினிக்கு. ஆகையால் எப் போதும் கணவன் அருகிலிருந்துவர முயன்று வந் தாள். மறக்காவிட்டாலும் தன்னையும் நிராதரவு செய்வ தில்லையல்லவா? இதுவே நளினிக்குப் போதும்.

கோபிகாந்தராய், பபனாவில் ஒரு பிரசித்தமான வக்கீல். கல்கத்தாவில் அவருடைய வீடு நளினியின் வீட்டருகே இருக்கிறது. ஏதோ ஒரு உறவில் அவரைச் சித்தப்பா என்றும், அவர் மனைவியை சித்தி என்றும்

அழைத்து வந்தாள். சித்தி அடிக்கடி அவள் வீட்டிற்கு வருவது வழக்கம். அவர்களிடம் சத்தியேந்திரனுக்கு ஒரு தனி மதிப்புண்டு. வீடு பக்கம் பக்கத்தில் இல்லா விட்டாலும் இரண்டு வீட்டாருக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. சித்தப்பா புதல்வி ஹேமாவுக்கும், நளினிக்கும் மிகுந்த சிநேகம். ஒருவரையொருவர் விட்டுப் பிரிய மாட்டார்கள்.

அன்று மணி பனிரெண்டு அடித்துவிட்டது. சத்தியேந்திரன் கச்சேரிக்குச் சென்றுவிட்டான். வேறு வேலை ஒன்றும் இல்லாததால் நளினி சித்திரம் எழுதத் தொடங்கினுள். ஹேமா வந்ததும் நளினியின் கூந்தலைப் பிடித்துக்கொண்டு, "சரி, எழுதினது போதும், எழுந்திரு, நேற்று அண்ணுவின் மனைவி ஊரிலிருந்து வந்திருக்கிருள்" என்ருள்.

"அவளையும் ஏன் அழைத்துக்கொண்டு வரவில்லை?" என்று நளினி கேட்டாள்.

"அதெப்படி முடியும்? புதிதாக வந்திருப்பவள், திடீரென உன்னிடம் வந்துவிடுவாளா?"

"நான்தான் ஏன் போகவேண்டும்?"

ஹேமாங்கினி சிரித்துக்கொண்டு, "உன்னைப் பிடித்து இழுத்துக்கொண்டு போகிறேன்" என்ருள்.

கூந்தலைப் பிடித்து இழுத்தால் என்ன செய்வது; போகவேண்டித்தானே இருக்கிறது? ஆகையால் நளினியும் புறப்பட்டாள்.

போவதிலே ஒரு சங்கடமும் இருந்தது. ஹேமா வீட்டிற்குச் சென்ருலே திரும்பி வருவதற்கு ரொம்ப நேரமாகிவிடும். அதற்குள் சத்தியேந்திரன் ஆபீசிலிருந்து வந்து விடுவான். இப்படியே இரண்டொரு முறை நடந்திருக்கிறது. அதனல் சத்தியேந்திரன் ரொம்ப வருத்தமடைவான். அவன் வருத்தம் அடைந்தாலும் அடையாவிட்டாலும் நளினிக்கு அது பிடிக்கவில்லை. ஆபீசிலிருந்து வந்தவரை அவள் உபசரிக்கா

விட்டால் உஷ்ணம் தணியாது என்பது நளினிக்கு நன்கு தெரியும்.

எல்லாம் கடவுள் செயல்; எவ்வளவோ முயற்சித்தும் இன்று நளினி ஏழு மணிக்கு முன் வீடு திரும்ப முடியவில்லை.

அவன் சாப்பிடாமல் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான். கணவனுக்கு அவள் கையாலேயே சாதம் போட்டு வந்தாள். அவள் அருகில் சென்றதும் சத்தியேந்திரன் சிரித்தான். ஆனல், அந்தச் சிரிப்பு யதார்த்தமான சிரிப்பாக அவளுக்குப் படவில்லை. அவள் மனதிற்குள்ளாகவே அதிக பயமடைந்தாள். அவனைச் சாப்பிடும்படி சொன்னுள். ஆனல், சத்தியேந்திரன் “பசியில்லை” என்று சொல்லிவிட்டான். எவ்வளவோ வேண்டிக் கொண்டும்கூட அவன் சாப்பிட இணங்கவில்லை. அவன் ஏன் இவ்விதம் பிடிவாதம் செய்கிருன் என்பதை நளினி தெரிந்து கொண்டாள்.

* * *

இன்று ஹேமாங்கினி கணவன் வீடு போகப் போகிருள். அவளுடைய கணவன் உபேந்திரபாபு அழைத்துப்போக வந்திருக்கிருர். நளினி ரொம்ப நாளாகவே ஹேமாவைச் சந்திக்கப்போகவில்லை. இதனுல் ஹேமா அதிக துக்கமடைந்து, நளினியை வரும்படி கடிதம் எழுதியிருந்தாள்.

கணவன் உத்தரவின்றி எங்கும் போவதில்லை என்று நளினி பிரதிக்ஞை செய்து கொண்டிருந்தாள். இன்று அந்தப் பிரதிக்ஞையை காப்பாற்றினுல் அன்பான தோழியைப் போய் பார்க்க முடியாது! நளினி மிகுந்த சங்கடத்திலாழ்ந்தாள். மூன்று மணி வண்டிக்குப் போவதாக ஹேமா எழுதி இருக்கிருள். அப்படியானுல் புருஷனிடம் எப்படிக் கேட்கமுடியும்? ரொம்ப யோசித்த பிறகு போயே தீருவது என்று முடிவு கட்டினுள். சரியாக மூன்று மணிக்கு ராய்பாபு வீட்டிற்கு

வண்டியை அனுப்பி வைக்கும்படி வேலைக்காரியிடம் சொல்லிப் போனாள்.

வண்டியும் அதே நேரத்திற்கு வந்தது. ஆனால் ஹேமா மூன்று மணி வண்டிக்குப் போகவில்லை. ஆகை யால் அவள் நளினியை போகவிடவில்லை. அவள் எவ்விதமும் ஹேமாவிடமிருந்து தப்பித்துக்கொள்ள முடியவில்லை. ஹேமா இன்று பிரிந்துபோகப் போகிறாள். எத்தனை நாளைக்குப் பிறகு சந்திப்பாளோ தெரியாது. சுலபமாகப் போகவிடுவாளா?

நேரம் கழிந்துபோனால் கணவர் கோபித்துக் கொள்வார் என்று சொல்ல நளினிக்கு வெட்கமாயிருந் தது. மேலும் அது சாதாரணமாகச் சொல்லக் கூடிய வார்த்தையா? போயும் போயும் இதை யாராவது ஒப்புக் கொள்வார்களா? அதுவும் இந்த வயதிலா! கடைசியில் நளினி அதையும் சொல்லித் தீர்த்தாள். ஆனால் ஹேமா அதை நம்பவில்லை.

அவள் சிரித்துக்கொண்டு, "என்னை மூடம் என்று நினைத்துக்கொண்டாயா? இதெல்லாம் எனக்குத் தெரி யும். என் புருஷர் கோபிப்பதையும் நான் கண்டுதான் இருக்கிறேன்" என்றாள்.

அவள் பேச்சையெல்லாம் ஹேமா சிரிப்பாலேயே தட்டிக் கழித்துவிட்டாள். ஆனால் நளினிக்கு என்னவோ உள்ளுக்குள் மிகுந்த கஷ்டமாக இருந்தது. எல்லா ருடைய கணவன்மார்களையும் ஒரே அச்சிலா வார்த் திருக்கிறது? எல்லோரும் உபேன் பாபுவைப்போலவே இருப்பார்களா?

நளினி வீடு திரும்பும்போது இரவு மணி பத்து. கணவன், வீட்டின் முன் அறையில் தூங்கிக்கொண் டிருந்தான்.

மாதாங்கினி என்ற தாய்வீட்டு வேலைக்காரி நளினி யிடம் மிகுந்த அன்புடையவள். அவள்கூட இன்று கொஞ்சம் நளினியைக் கடிந்துகொண்டாள். சத்தியேந்

திரன் மிகுந்த கோபத்துடன் வெளி அறையில் படுக்கை போடச் சொல்லி இருக்கிருன் என்று தெரிந்துகொண்டாள்.

படுக்கையில் கண்ணை மூடிப் படுத்துக்கொண்டு சத்தியேந்திரன் தனது பழைய நினைவுகளில் மூழ்கி இருந்தான். நீண்ட நாளைக்குமுன் மறைந்த, மலர்ந்த தாமரை போன்ற சரளாவின் முகத்திற்கும், நளினியின் முகத்திற்கும், ஏதாவது பொருத்தம் உண்டா என்று பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய இதயத்திலே சரளாவின் அன்பு எல்லையில்லாத சமுத்திரம் போலவும், நளினியின் அன்பு சிறு குட்டை போலவும் நிறைந்திருக்கும்போது, நளினி மெதுவாக கதவைத் திறந்து கொண்டு அந்த அறைக்குள் பிரவேசித்தாள்.

சத்தியேந்திரன் கண்ணைத் திறந்து பார்த்தான். நளினி அவனது கால் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். சத்தியேந்திரன் கண்ணை மூடிக்கொண்டான். வெகுநேரம் இம்மாதிரியே கழிந்தது. இதனுல் சத்தியேந்திரன் கோபமடைந்தான்.

அவன், "நீ இங்கு என்ன செய்கிருய்" என்ருன்.

நளினி அழுதாள். ஒன்றும் பேசமுடியவில்லை.

அழுவதைக் கண்ட டிப்டி மாஜிஸ்ட்ரேட் இன்னும் அதிகக் கோபத்துடன், "நேரமாகிவிட்டதே! உள்ளே போய்த் தூங்கு" என்ருன்.

நளினி அழுதுகொண்டுதானிருந்தாள். இந்தத் தடவை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "நீங்கள் தூங்கவில்லையா?" என்ருள். சத்தியேந்திரன் தலையை அசைத்துக்கொண்டு, "எனக்கு அசாத்தியத் தூக்கம் வருகிறது. என்னுல் எழுந்திருக்க முடியாது" என்ருன்.

அழுவதைக் கண்டால் சத்தியேந்திரன் கோபமடைவான்! நளினி கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். கணவனுக்கு முன் இப்போது அவள் அழவில்லை. மெதுவாகப் பாதத்தைப் பிடித்துக்கொண்டு, "இந்தத்

தடவை என்னை மன்னித்துவிடுங்கள். இங்கு உங்களால் தூங்க முடியாது. உள்ளே வாருங்கள்'' என்றாள்.

சத்தியேந்திரன் உள்ளே போவானா? அவன்தான் போவதில்லை என்று உறுதி பூண்டிருக்கிறானே!'' "இவ்வளவு நேரத்திற்குப் பிறகு கஷ்டமொன்றுமில்லை. நீ போய்த் தூங்கு, நானும் தூங்குகிறேன்'' என்றான்.

நளினி, சத்தியேந்திரனை நன்கு அறிவாள். அவள் தனது அறைக்குச் சென்று இரவு முழுதும் கழித்தாள்.

அடுத்த நாளும் சத்தியேந்திரன் வீட்டிற்குள் போகவில்லை. அதாவது நளினியைப் பார்க்க விரும்பவில்லை.

நளினி ஒரு கடிதம் எழுதி வேலைக்காரி வசம் கொடுத்து அனுப்பினாள். சத்தியேந்திரன் அதைப் படிக்காமலேயே கிழித்தெறிந்துவிட்டு, "இவைகளை எல்லாம் இனிக் கொண்டு வராதே'' என்றான்.

நாலைந்து நாளைக்குப் பிறகு நளினியின் மூத்த சகோதரன் நரேந்திரபாபு, பபனா வந்து சேர்ந்தான். திடீரென தமையனைக் கண்டதும் நளினி மிகுந்த சந்தோஷமடைந்தாள். ஆனால், அதோடு ஆச்சரியமும் அடைந்தாள்.

"என்ன அண்ணா......?''

நரேந்திரபாபு சிரித்துக்கொண்டு, "ஊருக்கு வருவதற்கு ரொம்ப அவசரப்பட்டாயாமே?'' என்றார்.

"அவசரமா?''

இதன் அர்த்தத்தை நளினி அப்போதே அறிந்துகொண்டாள். "உங்களை எல்லாம் வெகு நாட்களாகப் பார்க்கவில்லையல்லவா?'' என்றாள்.

நளினி ஊருக்குப்போன அன்றைய இரவு சத்தியேந்திரனால் தூங்கமுடியவில்லை, அவன் இரவு முழுவதும் யோசித்துக்கொண்டே இருந்தான். இன்

னும் நேரம் இருக்கிறது, வண்டி ரொம்ப தூரம் போயிருக்காது என்று அவன் மனதில் பல தடவை தோன்றியது. ஆனாலும் கர்வத்தினால் அவன் நளினியை மறுபடி அழைத்து வரவில்லை.

அவளோடு வேலைக்காரியும் போய்விட்டாள். அவளுக்குத்தான் இந்தப் பிரிவின் காரணம் தெரியும். அவள் யாரிடமும் தெரிவிக்கக் கூடாதென நளினி எச்சரித்திருந்தாள். இதனால் புருஷனுக்குக் கெட்ட பெயர் ஏற்படும் என்று அவள் கருதினாள். யாரா இருந்தாலும் தங்கள் கணவனைக் கெட்டவனென்று சொல்லச் சம்மதிப்பார்களா? தாய் வீடு சென்றதும் நளினி பெற்றோர்களை வணங்கினாள். சின்னத் தம்பியை எடுத்து மடிமீது வைத்துக்கொண்டாள். எல்லாம் செய்தாள்; ஆனால், சிரிக்க மாத்திரம் முடியவில்லை.

"நளினி ஒரு நாள் பிரயாணத்திலேயே இப்படி உலர்ந்து போய்விட்டாளே!" என்று தாயார் சொன்னாள். ஆனால், அந்த உலர்ந்த முகம் மறுபடி மலரவே இல்லை.

ஒரு அற்ப காரணத்தால் மகத்தான கெடுதல் விளைந்துவிடுவதை நாம் உலகத்தில் அடிக்கடி பார்க்கிறோம். சூர்ப்பனகையின் அற்ப ஆசையின் காரணமாக பொன்னகரமான லங்காபுரியே அழிந்தது. சத்திய கீர்த்தியான அரிச்சந்திரனும் ஒரு அற்ப காரணத்தால் தான் மகத்தான கஷ்டத்துக்குள்ளானார். உலகத்திலே இம்மாதிரி திருஷ்டாந்தங்கள் பல கூறலாம். இங்குகூட ஒரு சிறிய கர்வத்தின் காரணமாக ஒரு பெரிய தீமை விளையப் போகிறது?

நளினி சிறிதும் கர்வத்துடனில்லை. அனைத்தையும் பொறுத்துக் கொண்டு மௌனமாக இருந்தாள். நாளுக்கு நாள் அவளால் சகிக்க முடியாமல் போய் விட்டது. "இந்த அற்ப காரியத்திற்காக கணவன் தள்ளி வைத்துவிடுவதா? இதற்காக அவள் ஏன் இறந்துபோகக் கூடாது?" என்று அவள் நினைத்தாள். நாளுக்கு நாள் நளினி மெலியத் தொடங்கினாள். சத்தி

யேந்திரனுக்கும் கோபம் தீர்ந்திருந்தது. அவள் ஒரு நிமிஷம் இல்லாவிட்டாலும் சகிக்க முடியாதவனுக்கு இந்தப் பொய்க் கோபம் எத்தனை நாளைக்கு இருக்கும்?

சத்தியேந்திரன் ஒவ்வொரு நாளும் வழி பார்த்துக் கொண்டிருந்தான். "இன்று ஒருவேளை நளினியின் கடிதம் வரும்; என்னை வந்து அழைத்துப் போங்கள் என்று எழுதியிருப்பாள். போய் அழைத்து வருவேன். இனி இந்த மாதிரி எல்லாம் நடந்துகொள்ள மாட்டேன்'' என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தான்.

ஆனால், வருவதை யாராவது தடுக்க முடியுமா? நடப்பது நடந்தேதான் தீரும். நீங்களும் நானும் புழு பூச்சிகளுக்குச் சமானந்தானே! இன்றைக்கு, இன்றைக்கு என்று ஆறு மாதங்கள் கடந்து விட்டன. அந்தத் துர்ப்பாக்கியவதி ஒன்றும் எழுதவில்லை. பாபிஷ்டனான சத்தியேந்திரன் சஞ்சலமடைந்தான். சத்தியேந்திரனுக்கு மறைந்த கர்வம் மீண்டும் எழுந்தது. அதோடு கோபமும் சேர்ந்துகொண்டது. சத்தியேந்திரன் நன்மை தீமை ஒன்றையும் யோசிக்கவில்லை. 'இவ்வளவு கர்வம் உள்ளவளிடம் நாமும் அப்படியேதான் நடந்துகொள்ள வேண்டும்' என்று நினைத்துக் கொண்டான்.

இருவரில் யாருமே தங்கள் குற்றத்தை உணரவில்லை. சேர்ந்திருந்த இதயம் பிரிந்துவிட்டது. இளமையின் ஆரம்பத்தில் நாணமடைந்த கொடியை யாரால் நிமிர்த்த முடியும்? இனித் தாமதிக்க முடியாது. விலகுவதற்கான வேளை வந்துவிட்டது. சத்தியேந்திரா! உன்னைக் குறைகூறவில்லை. அவள் பேரிலும் குற்றத்தைச் சுமத்த முடியாது. ஆனால், இரண்டு பேரும்தான் தப்பு செய்திருக்கிறீர்கள். குற்றம் வெளிப்படுமானால் யார் அதிக வேதனைப்படுவார்களோ அது ஆண்டவனுக்குத்தான் தெரியும்; நமக்குத் தெரியாது. உனக்குப் புலப்படாது. எதைச் சாதிப்பதற்காக நீங்கள் இருவரும் இப்படி நடந்து கொண்டீர்களோ தெரியவில்லை. அந்த ஆசை அழிவதில்லை. அழிப்பதற்குப் பிரியப்

படுவதில்லை. அந்த ஆசை என்ன என்பதைக்கூட நன்கு அறிந்து கொள்ளக்கூடுவதில்லை. ஆனால், மனம் என்னவோ அந்த நிறைவேறாத ஆசையினால் 'ஆய் ஆய்' என அடித்துக்கொண்டது. ஏன் இவ்விதம் லட்சியமற்று அங்கலாய்த்துக் கொள்கிறது என்பதையும் நிர்ணயிக்க முடிவதில்லை. ஆசை கொள்வதாலோ, அல்லது மனதுடன் துவந்த யுத்தம் செய்வதாலோ உனது குற்றத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முடியுமா?

'இவ்வளவு அழகான மருமகள்கூட பையனுக்குப் பிடிக்கவில்லையே' என்று தாயாருக்குப் பெரிய கவலையாக இருந்தது. இந்தக் குணவதியுடன் குடும்பம் நடத்தியிருக்க முடியாதா? இதை நினைத்து அவள் துக்கமடைந்தாள். தாய் என்ன சொல்லியும் மகன் மனம் மாறவில்லை. இனி வேறு வழிதான் என்ன? மகனுக்குப் பிடிக்கவில்லையானால் மருமகள் கதி என்னவது? கணவனுடைய ஆதரவில்தானே மனைவிக்கு உயர்வு இருக்கிறது? இதற்கு நான் என்ன செய்யக்கூடும்? அவன் இஷ்டத்துக்கு மாறாக நாம் என்ன செய்வது என நினைத்து தாயார் வீட்டுக் காரியங்களில் ஈடுபட்டாள்.

ஹரதேவபாபு இறந்து வருஷம் இரண்டாகி விட்டது. ஆனால், அதை நினைக்கவும் அவள் கண்களில் நீர் நிறைந்தது. அதன் பிறகு நளினியின் நினைவு வரவே கண்ணீரின் வேகம் அதிகரித்தது. இனி வரும் மருமகள் எப்படி இருப்பாளோ? கணவர் இருந்திருந்தால் இந்தத் துர்ப்பாக்கியவதிக்கு இவைகளை எல்லாம் காணவேண்டி இருந்திருக்காது.

சத்தியேந்திரன் மீண்டும் கலியாணம் செய்து கொண்டுவந்து விட்டான். தாயார் ஆலாத்தி சுற்றி இருவரையும் வரவேற்றாள். கண்களில் மறுபடியும் நீர் நிறைந்தது. அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "கண்ணில் ஏதோ விழுந்து விட்டது. அடிக்கடி நீர் வருகிறது" என்றாள்.

கிரிபாலா, பெரிய வாய்த்துடுக்குக்காரி. நளினியின் உறவினள். "இந்த வயதிலேயே மூன்று கலியாணம் ஆகிவிட்டது! இன்னும் எத்தனை கலியாணம் ஆகுமோ யார் கண்டார்கள்!" என்ருள்.

இந்தப் பேச்சு சத்தியேந்திரன் காதுவரையிலும் எட்டியது. நாளை பெண்ணும் மாப்பிள்ளையும் பள்ளி யறைக்குப் போகப் போகிருர்கள்.

ரொம்பத் தடபுடலாக எங்கிருந்தோ ஒரு வெகுமதி வந்தது. டாக்கா மஸ்லின் வஸ்திரம், போர்வை முத லிய விலையுயர்ந்த வஸ்துக்களெல்லாம் அதிலிருந்தன. இந்தமாதிரி உயர்ந்த சேலையை இதற்குமுன் அந்தக் கிராமத்திலுள்ளவர்கள் பார்த்ததே கிடையாது. "யார் அனுப்பியது" என்று அனைவரும் கேட்டார்கள். தாயார் அடிக்கடி கனைத்துக்கொண்டு, "சத்தியேந்திரனுடைய நண்பன் அனுப்பி யிருக்கிருன்" என்று சொல்லி வந்தாள்.

வீட்டு எஜமானி கண்ணீரை அடக்கிக்கொண்டு வெளிக்குச் சிரித்தபடி சீர் வந்த பலகாரங்களை அனை வருக்கும் கொடுத்தாள். எல்லோரும் வாங்கிக்கொண்டு வீடு திரும்பினர்கள். போகிறபோது ராஜபாலா, "நல்ல சீர்வந்தது" என்ருள்.

"அப்படித்தான் வரும். பெரிய வீடுகளிலெல்லாம் இம்மாதிரிதான் சீர்வரிசைகள் அனுப்புவார்கள்" என்று நிருத்தியகாளி சொன்னுள்.

கொஞ்சம் கொஞ்சமாக இந்தப் பேச்சு அடங்கிப் போகவே யோகமாயி, "அதிருக்கட்டும், மறுகல்யாணம் ஏன் செய்துகொண்டார்?" என்ருள். "ஏனே தெரிய வில்லை, நளினி ரொம்ப புத்திசாலிப் பெண்தான். ஒன்றும் தெரியவில்லை" என்று ஞானதா சொன்னுள்.

"பார்ப்பதற்கு ரொம்ப நல்லவள்போல இருப் பாள். ஆம், மூக்குக் கொஞ்சம் சப்பட்டையாகத்தானி ருக்கும். யானைக் கண்ணைவிடச் சிறிய கண்கள் என்று

சொல்லுவார்கள். எப்படி இருந்தால்தான் நமக்கென்ன அதைப்பற்றி?''

ரமாமணி கொஞ்சம் சிரித்துவிட்டு, "உங்களுக்குத் தெரிந்திருந்தால் இப்படிப் பேசுவீர்களா? அவள் பேச்சுக்குப் பேச்சு சிரித்துப் பேசும்போதே எனக்குத் தெரியுமே! அவள் நடத்தை நன்ருயில்லையாமடி, நன்ருயில்லையாம்! இல்லாவிட்டால் இப்படித் தள்ளிவிடுவார்களா?'' என்ருள். வாய் திறந்து ஒருவரும் பேசவில்லையாலுைம் சிலருக்கு உண்மைதானெனப்பட்டது.

இதற்கு இரண்டொரு தினத்திற்குப் பிறகு ரமாமணி ஜமீந்தார் வீட்டு ரகசியங்களையெல்லாம் அறிந்திருக்கிருள் என்று சகலரும் தெரிந்து கொண்டார்கள். அவளுக்கு இருக்கிற புத்தி யாருக்கு வரும்? விஷயம் வாஸ்தவம்தான் என அநேகர் நம்பினுர்கள்.

இந்தப் பேச்சு வீட்டு எஜமானிக்கு எட்டியது. அவள் கதவைச் சாத்திக்கொண்டு நிலத்தில் விழுந்து புரண்டு புரண்டு அழுதாள். "நளினி விபச்சாரியா! அவன் சரளாவுக்கு மேலாக நளினியிடம் பிரியம் கொண்டிருந்தானே! வாழ்வு பூராவும் நளினி என்ன செய்வாள்? சத்தியேன் வைத்துக் கொண்டால் சரி, இல்லாவிட்டால் நான் அவளைக் காசிக்குக் கூட்டிபோய் விடுகிறேன்'' என்று எண்ணிக்கொண்டாள். இந்தத் துர்ப்பாக்கியவதியின் எண்ணமெல்லாம் இந்த ஜன்மத்தில் ஈடேறவா போகிறது!

உடனே அவள் கதவைத் திறந்து மாதங்கினியைக் கூப்பிட்டு கதவை மூடிக்கொண்டாள். மாதங்கினியும் கல்யாணத்திற்கு வந்திருந்தாள். இருவரும் சலிக்கக் கண்ணீர் விட்டார்கள். நளினியின் பொன்னிற மேனி துரும்பாகியது. அவள் புருஷனுக்குச் செய்த தப்பு, மாமியாருக்கு அவள் சொல்லியனுப்பிய நமஸ்காரம் முதலிய விஷயங்களை எல்லாம் மாதங்கினி விவரமாகச் சொன்னுள்.

இதைக் கேட்கக் கேட்க மாமியாருக்குப் பழைய அன்பு அதிகரித்தது. மகன் பேரில் அளவில்லாத கோபம் உண்டாயிற்று. 'எனக்கு ஒன்றும் இந்த வீட்டில் அதிகாரம் இல்லையா? என் பேச்சை சந்தியேந்திரன் கேட்கக்கூடாதா? நளினியை அழைத்து வரப் போகிறேன். என் லக்ஷ்மியை இப்படியா ஆக்குவது' என்று எண்ணிக்கொண்டாள்.

அன்று மாலை தாயார் புத்திரனை அழைத்து, "அப்பா நளினியை அழைத்து வந்துவிடு" என்றாள். சத்தியேந்திரன் தலையை ஆட்டிக்கொண்டு. "முடியாது" என்றான்.

தாயார் அழுதாள். "அடே, நளினியைப் பற்றி ஊரெல்லாம் அபவாதமாகப் பேசுகிறார்களே, நீ அவள் புருஷனாயிற்றே. அவள் மானத்தைக் காப்பாற்ற மாட்டாயா?" என்றாள்.

"அபவாதம் என்ன?"

"அவளைத் தள்ளிவைத்துவிட்டு வேறு கல்யாணம் செய்து கொண்டதால் பலவிதமாகப் பேசுகிறார்கள்."

"ஊ ஊ-ம்"

தாயார் அதிகக் கோபமடைந்தாள். எப்படிப் பேச வேண்டும் என்பதெல்லாம் முதலிலேயே தீர்மானித்து வைத்திருந்தாள். ஆகையால் சிறிதும் யோசிக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. "சரி, என்னை நாளைக்கே காசிக்கு அனுப்பிவிடு. இங்கே நான் அரை நாழிகைகூட இருக்கமாட்டேன்" என்றாள்.

சத்தியேன் இப்போது பழைய சத்தியேனாக இருக்கவில்லை. சரளாவின் குண சௌந்தரியம் விளையாட்டு, சுகம், உயர்வு முதலியவைகளினாலோ அல்லது நளினியின் இனிமை, கிலேசம் முதலிவைகளினாலோ ஆன சத்தியேந்திரனாக இருக்கவில்லை. அவன் இதயமும் கடினமடைந்திருந்தது. வெட்கம், நாணம், மானம், அவமானம் சகலத்தையும் இழந்துவிட்டான். அவன்

அலட்சியமாக, "நீ எங்கு வேண்டுமானுலும் போய்க் கொள். நான் யாரையும் கூட்டிவர முடியாது" என்ருன்.

சத்தியேன் அம்மாதிரி பேசுவான் என்று அவள் துளிகூட எதிர்பார்க்கவில்லே. அவள் அழுது கொண்டே சென்றுவிட்டாள். போகிறபோது, "என் மருமகள் கெட்ட நடத்தையுடையவள் அல்ல. யார் என்ன சொன்னுல்தான் எனக்கென்ன? நான் ஒன்றை யும் நம்பமாட்டேன்" என்று சொல்லிப்போனுள்.

அடுத்த நாள், அத்தை சத்தியேந்திரனே அழைத்து "உனது நண்பனெருவன் வெகுமதி அனுப்பியிருக் கிருன் பார்த்தாயா?" என்ருள்.

சத்தியேந்திரன், "இல்லேயே! எந்த நண்பன்?" என்ருன்.

"தெரியாது, இதோ நான் துணிகளே எல்லாம் எடுத்து வருகிறேன்"

சிறிது நேரத்தில் அத்தை ஒரு துணி மூட்டையைக் கொண்டு வந்தாள். அதிலிருந்ததெல்லாம் மிக விலே உயர்ந்ததாயிருந்தது. அவன் அதிக ஆச்சரியமடைந் தான். யார் அனுப்பியது? சேலேயின் தலேப்பில் ஏதோ முடிந்திருப்பதைக் கண்டான். அவிழ்த்துப் பார்க்கவே அதில் ஒரு கடிதம் இருந்தது.

கையெழுத்தைப் பார்த்ததும் சத்தியேந்திரனின் மூளே கலங்கியது.

அதில் எழுதியிருந்தது :—

"சகோதரி, அன்பின் பரிசைத் திருப்பிவிட வேண் டாம். உனது அக்காள் அனுப்பியிருப்பதை ஏற்றுக் கொள்."

அந்த விடுதி அறை, மலர்ப் படுக்கை சத்தியேந்திர னுக்கு முள் படுக்கையாகிவிட்டது.

இந்த வாலிபனின் கர்வத்தைப்போல் வேறு யாரிடமாவது பார்த்திருக்கிருேமா? சத்தியேந்திரனைப் போலக் கர்வம்கொண்டு வேறு யாராவது இவ்வளவு பெரிய அனர்த்தத்தைச் செய்திருக்கிருர்களா? சிறு பிள்ளைப் பருவத்தில் புஸ்தகத்தைக் கிழித்திருக்கிருன். அதற்காக தந்தையும் அவனுக்குத் தண்டனை விதித்திருக்கிருர். அவனும் அனுபவித்திருக்கிருன். சத்தியேந்திரநாத்! இப்போது நீ இதயத்தைக் கிழித்து விட்டாய். அதன் தண்டனையை ஏற்கப் பயப்படுகிருயா?

நீங்கள் வாலிபர்கள். உலகம் உங்களுக்கு இன்பத்தின் விளைநிலமாக இருக்கிறது. ஆனல், இதையும் சொல்லுங்கள். உங்களில் யாருக்காவது உயிர் சுமக்க முடியாத சுமையாகத் தோன்றிய சமயம் உண்டா? வாழ்க்கையிலே சோர்வடைந்து விழும் நிலையிலிருந்திருக்கிறீர்களா? ஆனல், அம்மாதிரி அனுபவம் உங்களுக்கு நேராதிருந்தால் சிறிது சந்தியேந்திரனைப் பாருங்கள். வெறுப்பதானல், இஷ்டம்போல வெறுப்புக் கொள்ளுங்கள். துளியும் அனுதாபம் காட்டாதீர்கள். ஒன்றும் பேசாதீர்கள். இரக்கங் காட்டாதீர்கள், இறந்து தொலையட்டும்.

பாவம் செய்தவனே இறந்துவிட்டால் பிராயச்சித்தம் யாருக்கு? சத்தியேந்திரனுக்கு ஒவ்வொரு நாளும் தாங்கமுடியாத சுமையாக இருந்தது. என்ன முயற்சித்தும் அவனல் அந்தச் சுமையை அகற்ற முடியவில்லை. சந்தியேந்திரன் தனது மறந்துபோன வாழ்க்கையை மறந்தவன் போலானன். இல்லாவிட்டால்தான் என்ன? ஏதோ கெட்ட நடத்தையினல் புருஷனல் அவள் தள்ளி வைக்கப்பட்டிருக்கிருள் என்பதுதானே விஷயம்!

சத்தியேந்திரனுக்கு விவாகமாகி ஏறக்குறைய இரண்டு மாதம் ஆகிவிட்டது. இன்று ஒரு கடிதமும், ஒரு சிறு பார்சலும் கிடைத்தது. கடிதம் நளினியின் தமையன் நரேந்திர பாபுவினல் எழுதப்பட்டிருந்தது.

"சத்தியேன் பாபு, எனது தங்கைக்காக நான் தங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். இறப்பதற்கு முன் அவள் எவ்வளவோ சொல்லிப்போனுள். அதன்படி இந்த மோதிரத்தை தங்களுக்கு அனுப்பி இருக்கிறேன். இந்த மோதிரத்தை தங்கள் புதிய மனைவிக்கு அளிக்கும்படி அவள் வேண்டிக்கொண்டாள், அவளுடைய எண்ணப்படி நடப்பீர்களென்று நினைக்கிறேன். மேலும் அவள் இறப்பதற்குமுன் இந்த இளைய தங்கையின் க்ஷேமத்திற்காக தங்களிடம் ரொம்ப வேண்டிக்கொண்டாள். ஸ்ரீ நரேந்திரநாத்"

நளினிக்கு ஒரு குழந்தை பிறந்து இறந்தபோது இந்த மோதிரத்தை சததியேன் அவளுக்குக் கொடுத்திருந்தான். இந்த விஷயம் சத்தியேந்திரனுக்கு நினைவு வந்ததா என்ன?

சத்தியேந்திரன் இப்போது பபனுவில் இல்லை. என்ன காரணத்தாலோ தாயாரும் காசிக்குப் போகவில்லை. புது மனைவியின் பெயர் விறுவிது. ஒருவேளை போன ஜென்மத்திலாவது நளினியின் தங்கையா இருந்திருப்பாள்.

# ஹேமாங்கினி

நடுத்தர வகுப்பைச் சேர்ந்த குடும்பங்களிலே குடும்பத்தின் முக்கியஸ்தர்களில் யாராவது க்ஷயரோக நோய் பீடிக்கப்பட்டவர்களானால், அவர்கள் இறக்கு முன் குடும்பத்திலுள்ளவர்களைப் பாதி உயிரை வாங்கி விடுவார்கள். சுலோசனாவுடைய கணவன் பதிதபாவன னும் அப்படித்தான் தொல்லை கொடுத்துப் போனான். ஒன்றரை வருஷம் படுக்கையில் கிடந்துவிட்டு மழை காலத்தில் ஒரு நள்ளிரவில் பிராணனை விட்டுவைத் தான். சுலோசனா செய்யவேண்டியதை எல்லாம் செய்துவிட்டு கணவன் அருகில் சென்று உட்கார்ந்த பிறகு அவள் எழுந்திருக்கவேயில்லை. அவள் கணவன் சந்தடியின்றி உயிரை விட்டதுபோலவே, இவளும் பேச்சு மூச்சற்று உட்கார்ந்து கொண்டிருந்தாள். சத்த மிட்டுத் தெருவையே திரட்டவில்லை! அவளுடைய புதல்வி ஹேமாங்கினி அருகில்தான் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளைக்கூட எழுப்பவில்லை. அவள் சுகமாத் தூங்கிக் கொண்டிருந்தாள். தந்தை இறந்துபோனதுகூட தெரியாது. வீட்டில் வேறு வேலைக்காரர்கள்கூடக் கிடையாது. நெருங்கிய உற வினர்களோ அல்லது வேண்டிய மனிதர்களோ அரு கில் கிடையாது. அந்த வீதியிலுள்ளவர்கள்கூட

நாளுக்கு நாள் சலிப்படைந்து வந்திருந்தார்கள். அதோடு இன்று சாயங்காலத்திலிருந்தே மழை வேறு பிடித்துக்கொண்டது. தூக்கம் வராமல் படுத்துக் கொண்டிருப்பவர்கள்கூட வரமாட்டார்கள்.

வெளியில் கனத்த மழை பெய்து கொண்டிருந்தது. உள்ளே இறந்துபோன கணவனது பிரேதத்தின் முன் கற்சிலைபோல் அசையாது உட்கார்ந்து கொண்டிருந் தாள். அடுத்த நாள் விஷயம் தெரிந்த பின் ஜனங்கள் வந்து பிரேதத்தை எடுத்துச் செல்ல பாடைகட்டி மயா னத்திற்குக்கொண்டு போனார்கள். பெண்கள் சம்பிர தாயப்படி அழுது தீர்த்தார்கள்.

சுலோசனாவிடம் பெயருக்கு ஒரு சிறிய மாந்தோப்பு மிஞ்சியிருந்தது. தெருவாசிகளின் உதவியால் அதை யும் நூறு ரூபாய்க்கு விற்று புருஷனுக்குச் செய்ய வேண்டிய கருமாதிகளை எல்லாம் செய்து முடித்தாள்.

" இனி என்ன அம்மா செய்வது ?" என்று பெண் கேட்டாள்.

" கவலைப்படாதே கடவுள் இருக்கிறார் !" என்றாள் தாயார்.

கர்மம் செய்த பிறகு கையில் மிச்சமிருந்ததைக் கொண்டு எப்படியோ ஒரு மாதம் கழித்தார்கள். அதன் பிறகு வேறு வழி ஒன்றும் இல்லாமல் போகவே ஒரு நாள் அதிகாலையில் வீட்டைப் பூட்டிவிட்டுப் பெண் ணின் கையைப் பிடித்துக்கொண்டு தெருவுக்கு வந்து நின்று கொண்டாள்.

" எங்கே போவது அம்மா ?" என்று பெண் கேட்டாள்.

" கல்கத்தாவிற்கு, உன் அண்ணன் வீட்டிற்கு" என்று பதிலளித்தாள் தாயார்.

"எனது அண்ணா யார் அம்மா ? இதற்கு முன் அவனைப்பற்றி என்னிடம் சொன்னது கிடையாதே"

தாயார் சிறிது நேரம் பொறுத்து, "இதுவரையிலும் அவனை நான் மறந்திருந்தேன், கண்ணே" என்றாள்.

ஹேமா மிகுந்த புத்திசாலிப் பெண். அவள் அங்கேயே நின்றுகொண்டு, "முடியாது அம்மா, பிறத்தியார் வீட்டுக்கு ஏன் போகவேண்டும்? நம் வீட்டிலேயே இருந்துகொண்டு 'கூலிநாலி' செய்து 'கூழோ கும்மியோ' குடித்துக்கொண்டிருப்பதுதான். அதற்காக பிறர் வீட்டிற்குப் போவதா! அம்மா! நான் வீட்டை விட்டு எங்கும் வரமாட்டேன்."

"சும்மா நின்று கொண்டிராதே ஹேமா. பொழுது கிளம்பிவிடும். அவர் உன்னைப் படிக்க வைத்திருக்கிறார். அவைகளை எல்லாம் நீ வீணாக்கிவிடாதே. நீ எனக்குச் சொல்ல வேண்டுமா ஹேமா! வீட்டில் இருந்துகொண்டே எப்படியோ தாயும் மகளும் நாளைக் கடத்திவிடலாம். ஆனால், உனக்கு விவாகமாக வேண்டாமா?" என்று நடந்துகொண்டே சொன்னாள்.

"வேண்டாமே கலியாணம்!" என்றாள் ஹேமாங்கினி.

"சாதிக்கு விரோதமாகப் பேசுகிறாயே! சாதியிலிருந்து தள்ளிவிட மாட்டார்களா?"

"சாதியை வைத்துக்கொண்டு என்னம்மா செய்வது? நாமிருவரும் ஏதாவது வேலை செய்து வயிறு வளர்ப்போம். நமது சாதி இருந்தால் என்ன, போனால் என்ன? உலகத்தில் வேறு எத்தனையோ சாதிகள் இருக்கின்றனவே. கலியாணம் செய்யாததால் அவர்கள் சாதி ஒன்றும் போவதில்லையே! நாமும் அவர்களைப் போலிருக்கலாமே."

பெண்ணின் பேச்சைக் கேட்கத் தாயாருக்கு இவ்வளவு துக்கத்திலும் கூடச் சிரிப்பு வந்துவிட்டது. "அப்போது கிராமத்தைவிட்டுப் போகவேண்டியது

தான். சாதி போன பிறகு ஒருவரும் நம்மை வாசல் பெருக்கக்கூடக் கூப்பிடமாட்டார்கள்.'' என்ருள்.

ஹேமா மறுபடி வேறு பேசவில்லை. எத்தனையோ துக்கமான நினைவுகள் அவள் உள்ளத்திலே எழுந்தது. மௌனமாகவே நடந்தாள். கிராமங்கள் வழியாக நுழைந்து சென்ற அந்தப் பாதையில் இரண்டரை மைல் சென்ற பிறகு சித்தேஸ்வரி தென்பட்டது. அங்கே நின்று தேவியை மிகுந்த பக்தியுடன் தரிசனம் செய்தார்கள். கோவிலைவிட்டு வெளியே கிளம்பியதும் ஹேமா, “அம்மா, நன்ருக விடிந்துவிட்டது. எனக்கு நடப்பதற்கு வெட்கமாக இருக்கிறது'' என்ருள.

சுலோசனுவிற்கும் இம்மாதிரி நடந்து பழக்கமில்லை. ஆகையால் அவளுக்கும் கூட வெட்கமாகத்தானிருந்தது. ஒரு கிழவி கங்கைக்கு ஸ்நானம் செய்ய போய்க்கொண்டிருந்தாள். அவளிடம், “ஸ்ரீராம்பூர் ஸ்டேஷனுக்கு இதுதான் வழியா ?'' என்று கேட்டாள்.

கிழவி இவர்களைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துவிட்டு, “நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் அம்மா ?'' என்ருள்.

சுலோசன அவளுடைய கேள்விக்கு ஒன்றும் பதிலளிக்கமால், “ஸ்டேஷனுக்குப் போவதற்கு வேறு வழி இருக்கிறதா ?'' என்ருள்.

“கோவிலுக்கு எதிரில் ஒரு ஒற்றையடிப் பாதை போகிறது. அது நேராக ரயில்வே ஸ்டேஷனுக்கே போகிறது'' பிறகு அந்தப் பாதையை கையை நீட்டிக் காண்பித்துவிட்டு, “அக்கிராமத்திலிருந்து நேராக ரயில்வே ஸ்டேஷனுக்கே போகிறது. இந்தப் பாதையில் போ. ரயில் லயனுக்கு நேராக வலப் புறத்தில் போனல் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய் விடும். போ அம்மா, யாரும் ஒன்றும் சொல்லமாட்டார்கள்'' என்ருள். சுலோசன உடனே பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு அந்த வழியில் நடந்தாள்.

## 2

ஆம்ஹர்ஸ்ட் வீதியில் உள்ள குணேந்திரனுடைய வீடு ஏறக்குறைய காலியாக இருக்கிறது என்று தான் சொல்லவேண்டும். மூன்றும் மாடியில் ஒரு அறையைப் படிப்பதற்கும், மற்ெருரு அறையைப் படுப்பதற்கும் உபயோகித்து வந்தான். மற்ற அறைகள் எல்லாம் காலியாகத்தான் இருந்தன. கீழே ஒரு அறையில் சமையல்காரனும் இரண்டு வேலைக்காரர்களும் இருந்து வந்தார்கள். குணேந்திரனுடைய தந்தை ஒரு பெரிய இரும்பு வியாபாரி. அவர் இறக்கும்போது ஏராளமான சொத்து வைத்துவிட்டுப் போனுர். தந்தை இறந்த பிறகு குணேந்திரன் கடையை விற்று பணத்தை பாங்கில் போட்டுவிட்டு நிம்மதியாக வக்கீல் தொழில் புரிந்து வந்தான். அன்று மணி பத்து ஆகியும்கூட எழுந்திராமல் புஸ்தகம் படித்துக்கொண்டிருந்தான்.

"ஸ்நானம் செய்ய வாருங்கள்" என்று வேலைக்காரன் வந்து சொன்னுன்.

"வருகிறேன்" என்று கூறிவிட்டு மறுபடியும் படிப்பதில் மூழ்கிவிட்டான்.

வேலைக்காரன் சிறிது நேரம் கழித்து வந்து, "இரண்டு ஸ்திரீகள் வந்திருக்கிறுர்கள். தங்களைச் சந்திக்க வேண்டுமாம்" என்றுன்.

குணேந்திரன் அதிக ஆச்சரியமடைந்தான். அவன் படிப்பதைவிட்டு, "என்னையா ?" என்றுன்.

"ஆமாம், தங்களைத்தான் தங்களுடைய..." அவன் முழுதும் கூறி முடிப்பதற்குள் சுலோசன அறைக்குள் நுழைந்தாள். குணேந்திரன் புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு எழுந்து நின்று கொண்டான்.

சுலோசனா வேலைக்காரனைப் பார்த்து, "நீ வெளியே போ" என்றாள்.

வேலைக்காரன் சென்ற பிறகு சுலோசனா, "குணி, உன் அப்பா எங்கிருக்கிறார்" என்றாள்.

குணேந்திரன் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தான். ஒன்றும் பேசவில்லை.

சுலோசனா சிரித்துக்கொண்டு, "என்னை அடையாளம் தெரியவில்லையா? அப்பா! சுமார் பனிரண்டு வருஷங்களுக்கு முன் இதற்கு அடுத்த வீட்டில்தான் குடி இருந்தோம். உனக்குப் பூணூல் போட்ட வருஷமே நாங்கள் ஊருக்குப் போய்விட்டோம். அப்பா எங்கே கடைக்குப் போய்விட்டாரா?" என்றாள்.

"அப்பா இறந்து மூன்று வருஷம் ஆகிறது" என்றான் குணேந்திரன்.

"ஐயையோ! அப்பா! இறந்து விட்டாரா! அத்தை எங்கே?"

"அவளும் இல்லை, அப்பாவுக்கு முன்பே இறந்து விட்டாள்"

சுலோசனா பெருமூச்சு விட்டுக்கொண்டு, "ஹூம், நான் ஒருத்திதான் இருக்கிறேன். எல்லோரும் போய் விட்டார்கள். உன் தாயார் இறக்கும்போது உனக்கு ஏழு வயது நிரம்பி இருந்தது. அதிலிருந்து உனக்குப் பூணூல் போடும் வரையிலும் நானே தான் வளர்த்தேன். ஏண்டாப்பா! உன் சித்தியை அடியோடு மறந்து விட்டாயா?" என்றாள்.

குணேந்திரன் உடனே அவளை நமஸ்கரித்தான். "சித்தி, நீயா?" என்றான்.

சுலோசனா அவனுடைய கன்னத்தைத் தொட்டு திருஷ்டி கழித்துவிட்டு, " ஆமாப்பா, உன்னுடைய அதே சித்திதான்" என்றாள்.

குணேந்திரன் ஒரு நாற்காலியை அருகில் இழுத்துப் போட்டு, "உட்காரு சித்தி," என்ருன்.

சுலோசனு சிரித்துக்கொண்டு, "உன் அடைக்கலமாக வந்தபின் உட்காராமல் எங்கு போகப்போகிறேன். உனக்கு இன்னும் கலியாணமாகவில்லையா?" என்ருள்.

இந்தத் தடவை குணேந்திரன் சிரித்து விட்டான். "இன்னும் அதற்கு வேளை வரவில்லை அம்மா?" என்ருன்.

சுலோசனு "இப்போது வேளை வந்து விட்டது. வீட்டில் பெண்கள் ஒருவருமே இல்லையா?" என்ருள்.

"இல்லை"

"யார் சமையல் செய்கிருர்கள்?"

"சமையல்காரன் இருக்கிருன்"

"இனி சமையல்காரன் வேண்டியதில்லை, நானே சமைக்கிறேன். சரி, அதெல்லாம் பின்னுல் ஆகட்டும். நான் வேறு முக்கியமான இரண்டொரு விஷயங்களைப் பற்றிச் சொல்லவேண்டும். ஹேமாவின் தந்தைக்கு இங்கு வேலை போன பிறகு நாங்கள் ஊருக்குப் புறப்பட்டுப் போய்விட்டோம். கையில் கொஞ்சம் ரூபாயும் இருந்தது. அதோடு ஊரில் சிறிது நிலபுலன்கள் இருந்தது. இவைகளே எங்களுக்குப் போதுமானதாக இருந்தது. அதற்கப்புறம், அடுத்த வருஷமே அவருக்கு க்ஷயரோகம் பிடித்தது. மருந்து முதலியவற்றிற்காக இருந்ததெல்லாம் செலவாயிற்று. அப்படிச் செலவு செய்தும் அவரைக் காப்பாற்ற முடியவில்லை. இப்போது அவர் இறந்து ஒரு மாதமாகிறது. இனி உன்னை நம்பித்தான் இருக்கிருேம். நீதான் சாப்பாடு போட வேண்டும். இதுதான் நான் கேட்டுக்கொள்வது" என்ருள்.

அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. குணேந்திரனுடைய கண்களிலும் நீர் நிறைந்தது.

குணேந்திரன் மிகுந்த குழைந்த குரலில், "பெற்ற வளுக்குப் பிள்ளை சோறு போடமாட்டானா? நீ இம் மாதிரியா நினைத்துக்கொண்டு வந்தாய், சித்தி?" என்றான்.

சுலோசனா முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "இல்லை அப்பா, அப்படி நினைத்திருந்தால் எவ்வளவு கஷ்டமிருந்தபோதிலும் இங்கு வந்திருக்க மாட்டேன். உன்னைக் குழந்தையில் பார்த்தது. பனிரண்டு வருஷங்களுக்குப் பிறகு கஷ்டகாலத்தில் உன் நினைவு வந்ததும் வேறு ஒன்றும் யோசியாமல் உன்னிடம் வந்துவிட்டேன். அதோடு இன்னொரு விஷயம். என் பெண் ஹேமநளினி உன் தங்கைதான். என்னைவிட அனாதையாக இருக்கிறாள். கலியாண வயது வந்து விட்டது. ஆனால் இன்னும் கையில் கங்கணமேற வில்லை. அதற்காகவும் நீ முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்" என்றாள்.

குணேந்திரன் "அவளை ஏனம்மா அழைத்து வரவில்லை?" என்றான்.

"அவளையும் அழைத்து வந்திருக்கிறேன். ரொம்ப மானி, இவைகள் எல்லாம் அவளுக்கு எதற்குத் தெரிய வேண்டுமென்று அவளைக் கீழேயே நிறுத்திவைத்து விட்டு நான் மட்டும் மேலே வந்தேன்?" என்றாள்.

குணேந்திரன் வருத்தத்துடன், வேலைக்காரனிடம், "'நந்தா' கீழே ஹேமா உட்கார்ந்திருக்கிறாள். போய் அழைத்து வா," என்றான்.

சுலோசனா "அப்பா, அதற்காக உனக்கு ஆகும் செலவை நான் எப்போதும் தீர்க்க முடியாது—"

குணேந்திரன் இடையில் தடுத்து, "அம்மா, இப்படிப் பேசினால் நான் எழுந்து வெளியில் போய் விடுவேன். எனது தாயார் இறந்த பிறகு நீ என்னை வளர்த்ததை எல்லாம் சொல்ல ஆரம்பித்தேனானால் நீ எழுந்து வெளியே போய்விடுவாய். இம்மாதிரிப் பேச்சுக்களைப்

பேசாது விட்டு விடுவதுதான் நல்லது. நீயும் பேசாதிரு, நானும் பேசவில்லை'' என்றான்.

சுலோசனா சிரித்துக்கொண்டு, "சரி ஹேமா வருகிறாள். அவள் முன் ஒன்றும் சொல்லமாட்டேன். இன்னும் ஒரு விஷயம் சொல்லவேண்டியதிருக்கிறது, சொல்லட்டுமா? தாயார் ஆனதினால் இப்படிச் சொல்லுகிறேன் என்று நினைக்க வேண்டாம். உனது தங்கை ரூபத்திலாகட்டும், குணத்திலாகட்டும், சாதாரணமானவளல்ல. அவளுடைய தந்தை நன்கு படிக்க வைத்திருக்கிறார். கடைசி காலத்தில் சில வருஷங்கள் அவருக்கு அதுதான் வேலையாக இருந்தது. நான் சொல்லுகிறேன், ஹேமா புகும் வீட்டில் லக்ஷ்மிபோல் விளங்குவாள்—அடே, ஹேமா, வா அம்மா. இவன் தான் உனது குணி அண்ணா. அவனுக்கு நமஸ்காரம் செய்?'' என்றாள்.

ஹேமா நமஸ்கரித்துவிட்டுத் தலைகுனிந்து ஒரு பக்கமாக நின்றாள். களைத்துப் போயிருந்த அவளுடைய முகத்தையே இமையாது குணேந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். சுலோசனா இதைக் குறித்துத்தான் சொன்னாளோ என்னவோ, "குணீ, ஹேமாவை உன் கையிலேயே ஒப்படைத்து விடுவேன். ஆனால், லோகாசாரம் அதற்கு இடங்கொடுக்காதே. நான் இறந்தால் ஹேமா பத்து நாள் தீட்டுக் கழிக்கவேண்டும். நீயும் மூன்று நாள் இருந்துதான் தீரவேண்டும். அதனால் இவள் உனக்குத் தங்கையாகிறாள்'' என்றாள்.

குணேந்திரன் சமாளித்துக்கொண்டு, "ஹேமா, சொல்வதைக் கேட்டாயா; நம்மிருவருக்கும் ஒரே அம்மா தான். தாய் வீட்டில் என்னைப் போலத்தான் நீயும் இருக்கவேண்டும். வாருங்கள் போய்ச்சாப்பிடலாம்'' என்றான்.

சுலோசனா ஆச்சரியத்துடன், "குணீ, உன் மார்பிலே பூணூலைக் காணோமே'' என்றாள்.

குணேந்திரன் தன் மார்பைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, "நாங்கள் பிரம்ம சமாஜிகள்" என்றான்.

"பிரம்ம சமாஜியா? ச்சி! அதெல்லாம் வேண்டாமப்பா! சரி, பாதகமில்லை. பிராயசித்தம் செய்து கொண்டு, பூணூல் போட்டுக்கொண்டால் போச்சு."

"இது அப்பாவே செய்துவிட்டுப் போனார். இதற்காக பிராயச்சித்தம் செய்யவேண்டும் என்று நினைக்கவில்லை. பிரம்ம சமாஜம் ஒன்றும் கெட்டதல்லவே."

சுலோசனாவின் உள்ளத்திலே பெருத்த வேதனை உண்டாயிற்று. அவள் அப்படியே உட்கார்ந்து விட்டாள். சிறிது நேரம் கழித்து ஒரு பெருமூச்சு விட்டு, "ஜனங்களுக்கு ஏன் இப்படி எல்லாம் புத்தி போகிறதோ" என்றாள்.

குணேந்திரன் புன்முறுவலுடன் ஒரு புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டான்.

ஹேமா இந்த அறையிலேயே இருந்து வந்ததால் குணேந்திரன் தன் படுக்கும் அறையையே படிக்கும் அறையாக உபயோகித்து வந்தான். ஒரு ஞாயிறு, மத்தியானம் ஹேமா, அறைக்கு வெளியில் நின்று கொண்டு "குணீ அண்ணா, உள்ளே வரட்டுமா?" என்றாள்.

குணேந்திரன் உள்ளிருந்தபடியே, "வா", என்றான்.

ஹேமா அறைக்குள் நுழைந்ததும், "நீ சதா இந்தப் படுக்கை அறையிலேயே ஏன் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்?" என்றாள்.

"இதனால் என்ன? இங்கே படித்தால் படிப்பு வராதா?"

"வாசக அறையில் உட்கார்ந்து படிப்பதால் என்ன முழுகிப்போய்விடும்?"

"ஒன்றும் முழுகிப் போவதில்லை. ஆனால், கொஞ்சம் கெட்டுப் போயிருந்தது. இந்த அறையில் அதைச் சரிப்படுத்துகிறேன்."

ஹேமா முதலில் சிரித்தாள்; பிறகு விஷயம் விளங்காததால், "நீ பேசுவதெல்லாம் இப்படித்தா னிருக்கிறது. ஒரு விஷயத்தையும் நீ நேராகப் பேசுவ தில்லை" என்றாள்.

குணேந்திரன் சிரித்தான். வேறு ஒன்றும் பேச வில்லை.

"ஆனால், எனக்கு எல்லாம் தெரியும். அந்த அறையில் நான் இருக்கிறேன் என்று நீ வருவதில்லை. நீ என்னைக் கண்டு வெட்கமடைகிறாய். நான் துளிக் கூட உன்னைக் கண்டு வெட்கமடைவதில்லை."

"ஏன் வெட்கமடையவில்லை? அடையவேண்டும்?"

ஹேமா எதிரில் நின்றுகொண்டு. "உன்னைக் கண்டு நான் ஏன் வெட்கப்பட்டுக் கொள்கிறேன்? நீ என்ன அந்நியனா? அது முடியாது. அண்ணா வா. அந்த அறைக்குப் போகலாம்."

இதைக் கூறிவிட்டு அவள் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு சென்றுவிட்டாள்.

குணேந்திரன் ஒருநாள் ஹேமாவுக்கு வளையல், மோதிரம் முதலியவைகளெல்லாம் வாங்கி வந்தான். இதைப் பார்த்து சுலோசனா, "ஏனப்பா, இதெல்லாம் எதற்காக வாங்கி வந்தாய்?" என்றாள்.

"இதற்குள் என்னம்மா ஆகிவிட்டது? இன்னும் எவ்வளவோ வேண்டுமே! வெறுங் கையோடு இருக்க முடியுமா?"

சுலோசனா அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. ஆனால், மனதிற்குள்ளாகவே மிகுந்த வருத்தமடைந் தாள். இருவரும் இவ்வளவு சீக்கிரத்தில் எப்படி எப்

படி ஒருவரையொருவர் ஆழ்ந்து நேசிக்கிறார்கள் என்று யோசிக்கத் தொடங்கினாள்.

ஒருநாள் அவள் குணேந்திரனைக் கூப்பிட்டு "அப்பா, இந்தத் தை மாதத்தில் ஹேமாவுக்கு எப்படியும் கல்யாணம் செய்துவிட வேண்டும். எப்பவோ ஒரு நாளைக்குச் செய்துதானே தீரவேண்டும். பெண் பெரியவளாகிவிட்டாள்" என்றாள்.

"அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். நல்ல மாப்பிள்ளையாகக் கிடைக்க வேண்டாமா? சும்மா கையையும் காலையும் கட்டி கிணற்றில் தள்ளிவிட முடியுமா?" என்றான்.

சுலோசனா, ஒரு ஆழ்ந்த மூச்சுவிட்டு "நல்லதோ கெட்டதோ, அது அவள் தலைவிதிப்படி ஆகிவிட்டுப் போகிறது. நாம் செய்ய வேண்டியதைச் செய்து விடலாம். அப்புறம் கடவுள் இருக்கிறார்" என்றாள்.

"அது சரி" என்று கூறிவிட்டுப் போய்விட்டான். அவன் கண்ணை மறைத்திருந்த ஒரு திரை அகன்றது. சுலோசனா அதை நன்கு பார்த்தாள். பிறகு அவள் ஒரு ஆழ்ந்த மூச்சு விட்டுக்கொண்டு தன் காரியமாகப் போய் விட்டாள். மனதிற்குள்ளாகவே, 'முடியாது, இது சரியல்ல. விரைவில் ஹேமாவுக்கு கல்யாணம் செய்து விடுவதுதான் நல்லது' என்று சொல்லிக் கொண்டாள்.

கொஞ்ச நாளைக்குப் பிறகு ஹேமா அறைக்குள் நுழைந்து, "இன்னும் படுத்துக்கொண்டிருக்கிறாயே, சொக்காய் போடவேண்டாமா? எழு ஜல்தி,' என்றாள். குணேந்திரன் படுக்கையில் படுத்த வண்ணம் ஹேமாவையே பார்த்துக்கொண்டிருந்தான். ஹேமா உடனே அலமாரியைத் திறந்து கை நிறையப் பணத்தை எடுத்து முந்தானையில் முடிந்து கொண்டாள். "அண்ணா, கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். இனியும் நேரம் செய்யாதே. எழுந்திரு. கடை எல்லாம் மூடி விடுவார்கள்" என்றாள்.

குணேந்திரன் அவளுடைய அலங்காரத்தைப் பார்த்ததுமே தெரிந்து கொண்டான். இருந்தாலும், "எங்கு போகவேண்டும்?" என்ருன்.

"அடராமா! வண்டியைத் தயார் செய்யச் சொல்லி ஒரு மணி நேரமாகிறது; இப்போது 'எங்கு போவதற்கு' என்று கேட்கிருயே!"

"அப்படியானல் வண்டிக்காரனுக்கு அல்லவா போகிற இடம் தெரியும்? எனக்கு எப்படித் தெரியும்?"

ஹேமா சிரித்துக்கொண்டு, "எதற்கு அண்ணு வண்டிக்காரனுகப் போகிருய்! சீக்கிரம் வா, கடை மூடி விடுவார்கள்" என்ருள்.

"என்ன கடை?"

"புஸ்தகக் கடைதான். உன்னிடம் மான்தான் சொல்லவில்லையா? நான் அவனிடம் சொல்லி அனுப்பினேனே! நல்ல நல்ல புஸ்தகங்களெல்லாம் வெளி வந்திருக்கின்றன. நான் ஒரு லிஸ்ட் தயார் செய்து வைத்திருக்கிறேன்."

அவள் கையில் லிஸ்ட் இருப்பதைப் பார்த்ததும் "எங்கே லிஸ்டைப் பார்ப்போம்" என்ருன்.

"ஊஹூம், லிஸ்டைப் பார்த்தால் நீ வாங்கித் தர மாட்டாய்" என்ருள்.

"ஆனல் மறைத்துக்கொண்டு வாங்கினலும், படிக்கத் தரமாட்டேன்."

ஹேமா சிறிது நேரம் பேசாமல் இருந்துவிட்டு, "சரி, வண்டிக்கு வா, காட்டுகிறேன்" என்ருள்.

சாயந்திரம் இருவரும் புஸ்தகங்கள் வாங்கிக் கொண்டு வீடு திரும்பினர்கள். சுலோசன புஸ்தகங்களைப் பார்த்து, "இத்தனை புஸ்தகங்கள் என்னத்திற்கடி?" என்ருள்.

"இவைகளெல்லாம் ஹேமா புஸ்தகங்கள்தான். கண்ட புஸ்தகங்களை எல்லாம் வாங்கிப் பணத்தைப் பாழ்படுத்தி வந்திருக்கிறாள்."

"நீ கொடுக்கவில்லையா அப்பா?" என்று சுலோசனா கேட்டாள்.

"நான் கொடுக்கவேண்டுமா? சாவி, அவளிடம் இருக்கிறது. பணத்தை எடுத்துக் கொண்டாள். வண்டியைத் தயார் செய்யச் சொல்லிப் போய் புஸ்தகத்தை வாங்கிக்கொண்டாள். நான் பெயருக்குக் கூடப் போயிருந்தேன்" என்றான்.

ஹேமா புஸ்தகங்களை எடுத்துக்கொண்டு வீட்டிற்குள் சென்றாள். சுலோசனா, குணேந்திரனிடம், "அப்பா இவ்வளவு செல்லம் கொடுக்கக்கூடாது. அன்னியர் வீட்டில் அப்புறம் கஷ்டப்பட வேண்டிவரும்" என்றாள்.

குணேந்திரன் உள்ளே புத்தக அறையைப் போய்ப் பார்த்தான். ஹேமா விளக்கருகில் உட்கார்ந்து கொண்டு புஸ்தகங்களுக்கு நம்பர் போட்டுக்கொண்டிருந்தாள். "உனக்கு இத்தனை செல்லம் கொடுக்கக் கூடாது. அன்னியர் வீட்டில் கஷ்டப்பட வேண்டியிருக்கும் என்று அம்மா சொல்கிறாள்" என்றான்.

ஹேமா மிகுந்த கோபத்துடன், "எதற்காக கஷ்டப்படுகிறேன்? என்னை ஏழை எளியவன் வீட்டில் கொடுத்தால் மறுநாளே தேடி வந்து விடுகிறேன்" என்றாள்.

குணேந்திரன் சிரித்துக்கொண்டு, "ரொம்ப சரி" என்றான்.

ஹேமா ஒன்றும் பேசவில்லை. குணேந்திரன் அவளையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்து விட்டு, பெருமூச்சை அடக்கிக்கொண்டு தன் அறைக்குச் சென்றுவிட்டான்.

துர்க்கா பூஜை சென்றுவிட்டது. ஹேமா தெப்ப உற்சவத்தைப் பார்த்துவிட்டு வீடு திரும்பினாள்.

தாயாரை வணங்கி விட்டு மேலே சென்றுவிட்டாள். மேலே மாடியில் சந்திர வெளிச்சத்தில் குணேந்திரன் உலாவிக்கொண்டிருந்தான். ஹேமா அவனருகில் சென்று பாதத்தைத் தொட்டு வணங்கினுள். குணேந்திரன் ஒன்றும் பேசவில்லை. அவளேயே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். இதனுல் ஹேமா சிறிது வெட்கமடைந்தாள். ஆனுலும் அவள் "எனக்கு ஆசி கூறவில்லையா, அண்ணு?" என்ருள்.

குணேந்திரன் திடீரென தூக்கத்திலிருந்து விழித்தவனைப்போல "கூருமல் என்ன?" என்ருன்.

"எங்கே கூறக்காணுேமே!"

"மனதிற்குள்ளாகவே கூறிக்கொண்டேன்."

ஹேமா சிரிப்பை அடக்கிக்கொண்டு, "என்ன ஆசி கூறினுய், சொல்லு" என்ருள்.

குணேந்திரனுக்கு மிகுந்த சிரமமாகப் போய் விட்டது. கடைசியாக மிகக் கம்பீரமாக, "ஆசி கூறிவிட்டு அதைச் சொல்லக்கூடாது. கூறிவிட்டால் அதனுடைய பலன் இல்லாமல் போய்விடும்" என்ருன்.

"சரி, அது போகட்டும். நீ அம்மாவை வணங்கினுயா?"

"நான் தினசரி வணங்கி வருகிறேன்."

ஹேமா வருத்தத்துடன் "அதுவல்ல நான் சொல்வது. இன்று தசரா பண்டிகையல்லவா. விசேஷ நாளன்று நமஸ்கரிக்க வேண்டாமா? இல்லாவிட்டால் அவள் மனதிற்குள் துக்கப்படுவாள்" என்ருள்.

குணேந்திரன் கீழே சென்ருன்.

ஏறக்குறைய ஐப்பசி சென்றுவிட்டது. ஒரு நடுப்பகல் ஹேமா திடீரென அறைக்குள் நுழைந்து, "உங்களுக்குப் பேசுவதற்கு வேறு விஷயம் கிடைக்க

வில்லையா? வேறு வேலை கிடையாதா? நான்தான் உங்களுக்கு என்ன கெடுதல் செய்துவிட்டேன்?'' என்றாள்.

அதன் பிறகு அவள் அழத்தொடங்கினாள்.

குணேந்திரன் திடுக்கிட்டுப் போனான். "என்ன விஷயம் ஹேமா?'' என்றான்.

ஹேமா அழுதுகொண்டே, "ஒன்றும் தெரியாதவன் போல என்ன விஷயம் என்று கேட்கிறாய்? சாந்திப்பூரோ, எங்கேயோ பேச்சு வார்த்தை எல்லாம் முடிந்து விட்டது என்று அம்மா சொன்னாளே. நான் கல்யாணம் செய்து கொள்கிறதில்லை என்றால் நீங்களெல்லாம் சேர்ந்து என்னை என்ன செய்துவிடுவீர்கள்?'' என்றாள்.

குணேந்திரன் விஷயத்தைப் புரிந்து கொண்டான். அவன் சிரித்துக் கொண்டே, "அடே இதுதான் விஷயமா! உனக்கு வயது வந்து விட்டது; கலியாணம் செய்யக்கூடாதா?'' என்றான்.

"கூடாது''

"கூடாதா? கலியாணம் ஆகாவிட்டால் சுற்றத்தார்கள் சாதியிலிருந்து தள்ளிவைத்து விடமாட்டார்களா?''

"நீ கூடக் கலியாணம் செய்து கொள்ளவில்லையே! உன்னை ஏன் தள்ளிவைக்கவில்லை?''

"என் விஷயம் வேறு. நான் பிரமசமாஜி பாரு, உங்களில் பெண்ணுக்கு யுக்த வயதில் கலியாணமாகாவிட்டால் சாதியிலிருந்து தள்ளி வைத்துவிடுவார்கள் ஆகையால்—''

ஹேமா கண்ணைத் துடைத்துக்கொண்டு, "நீங்கள் பாக்கியசாலிகள். உங்கள் சமூகத்தில் மனுஷத்வம்

இருக்கிறது. ஆகையால் நீங்கள் மனிதனை விலங்கிட்டு வைப்பதில்லை. நான் இந்த வீட்டை விட்டு ஒருக்காலும் போகமாட்டேன். நீங்கள் எவ்வளவு சூழ்ச்சி செய்தாலும் சரி'' என்றாள்.

குணேந்திரன் அவளைச் சாந்தப்படுத்துவதற்காக மிகுந்த அன்புடன், "அதுவும் ரொம்பப் பெரிய வீடு. ரொம்ப நல்ல மனிதர், படித்தவர், கண்ணியமானவர்; அங்கு உனக்கு எந்தவிதமான கஷ்டமும் உண்டாகாது'' என்றான்.

ஹேமா கொஞ்சம் கூட ஆறுதல் அடையவில்லை. எதிரில் தொங்கிக் கொண்டிருந்த படுதாவை விலக்கி விட்டு, "அது முடியாது; முடியவே முடியாது. உன்னிடம் முதலிலேயே சொல்லிவிடுகிறேன். நான் இருப்பது உனக்குப் பாரமாக இருந்தால் எனக்குச் சாப்பாடு போடவேண்டாம். புத்தக அறையிலேயே என்றும் சாப்பிடாமல் இருந்து கொள்கிறேன். உன்னை ஒன்றும் கேட்க வருவதில்லை,'' என்றாள்.

குணேந்திரன் சிரிப்பதற்கு முயற்சித்தான். "அங்கேயும் உனக்குப் புத்தக அறை கிடைக்கும். கிடைக்கவில்லையானால் இந்த அறையை உனக்கு அங்கு கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்'' என்றான்.

ஹேமாவிற்கு அவன் கூறியது காதில்கூட விழவில்லை. அவள் அழுதுகொண்டே, "நீ ஒன்றும் செய்ய வேண்டாம் அண்ணா; ஒன்றும் செய்யவேண்டாம். உன் காலில் விழுகிறேன் அண்ணா, இந்த மாதத்தில் இது நடக்க முடியாதபடி எப்படியாவது நிறுத்திவிடு'' என்றாள்.

அவள் அழுவதைப் பார்த்து குணேந்திரன் கண்களிலும் நீர் நிறைந்தது. அவன் தன்னை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "இதெப்படி முடியும் ஹேமா? முடியாது, எல்லாம் நிச்சயமாகி விட்டதே?'' என்றான்.

"நிச்சயமாகிவிட்டால் அதை மாற்ற முடியாதா? நீ பார்த்து முடிவு செய்ததுதானே, இஷ்டப்படி மாற்றிக் கொள்ளலாம்."

"நான் உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என் பேச்சைக் கேளு."

சுலோசனுவிற்குச் சிறிதுச் சந்தேகம் இருந்தது. ஆகையால் அவளும் ஹேமாவைத் தொடர்ந்து மேலே வந்திருந்தாள். அவள் அறைக்குள் கோபத்துடன் நுழைந்து "இது என்ன ஹேமா? பைத்தியம் போல என்ன உளறுகிறாய்? பேச்சு வார்த்தை எல்லாம் நிச்சய மாகி முடிந்த பிறகு மறுப்பதா? நீ என்ன புண்ணியம் செய்தாயோ இப்படிப்பட்ட அண்ணன் கிடைப்பதற்கு! அதே மாதிரிதான் நல்ல புருஷனும் கிடைக்கப் போகிறான். அதை நீ வேண்டாமென்று உதைத்துத் தள்ளச் சொல்லுகிறாய்! ஹிந்துப் பெண்ணாய்ப் பிறந்துவிட்டு கிருஸ்துவச்சி மாதிரி கன்னிகா ஸ்திரி ஆகிவிடப் போகிறாயா? ச்சீ, கீழே போ" என்றாள்.

ஹேமா சென்றுவிட்டாள். சுலோசனா குணேந்திரனைப் பார்த்து, "இவைகளெல்லாம் இரவு பகலாக புஸ்தகம் படித்ததின் பலன்! பொழுது விடிந்து அஸ்தமிக்கும் வரையிலும் நாடகம் நாவல் இவைகளையே படித்துக் கொண்டிருந்தால் இப்படித்தான் புத்திபோகும். என்னவானாலும் இந்த மாதமே இவளைக் கடத்திவிட வேண்டும்" என்றாள்.

குணேந்திரன் பேசாமல் உட்காந்துகொண்டிருந்தான். சுலோசனா சிறிது நேரம் நின்று பார்த்து விட்டு மெதுவாகக் கீழே சென்றுவிட்டாள்.

இரண்டு நாளைக்குப் பிறகு குணேந்திரன் கச்சேரியிலிருந்து வந்த பிறகு ஏதோ புஸ்தகம் வேண்டியிருந்ததால் அறைக்குள் நுழைந்தான். ஹேமா அறைக்குள்ளிருந்தபடியே, "உள்ளே வராதே அண்ணா; நான் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றாள்.

குணேந்திரன் திடுக்கிட்டு நின்றுவிட்டான். "சாப்பிட்டால் என்ன. நான் உள்ளே வந்தால் நீ சாப்பிட மாட்டாயா?" என்ருன்.

"சாப்பிடும்போது உள்ளே வரக்கூடாது."

"வேலைக்காரி வரலாமா? நான் வந்தால்தான் சாதி போய்விடுமா? நான் அவளைவிட கேடுகெட்டவனு?"

ஹேமா சிரித்துக்கொண்டே, "சரி வா, நான் சாப்பிட்டாய்விட்டது" என்று சொன்னுள்.

"வேண்டாம், வேண்டாம். நீ சாப்பிடு. நான் துணிகளை மாற்றிக்கொண்டு வருகிறேன்!" என்று கூறி விட்டு குணேந்திரன் வேகமாகச் சென்றுவிட்டான். அவளுடைய நெஞ்சே பிளந்துவிடும்போல் இருந்தது,

அடுத்த நாள் குணேந்திரன் சாப்பிட்டுவிட்டு எழுந்ததும், ஹேமா அந்த எச்சில் தட்டில் சாப்பிடுவ தற்கு உட்கார்ந்துகொண்டாள். சமையல்காரனிடம் அதே தட்டில் சாதம் போடும்படி சொன்னுள்.

சமையல்காரன் ஆச்சரியத்துடன் "இந்தத் தட்டில் இப்பொழுதுதான் சாப்பிட்டுவிட்டுப்போனர்"என்ருன்.

"ஆமாம் தெரியும்; நீ போடமாட்டாயா?"

பக்கத்தறையிலிருந்த சுலோசன அவசரமாக எழுந்து "இதென்ன ஹேமா? இது குணியினுடைய எச்சில் தட்டு. போ, போய் சேலையை மாற்று" என்ருள்.

தட்டில் மிச்சமிருந்த எச்சில் சாதத்தை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு "சாதம் போடமாட்டாயா? குணி அண்ணுவின் தட்டில் சாப்பிடுவதற்கு தகுந்த யோக்கியதை உலகத்தில் எத்தனை பேருக்கு இருக் கிறது? இந்தத் தட்டில் சாப்பிடுவதற்கு புண்ணியம் செய்திருக்க வேண்டும்" என்ருள் ஹேமா.

சுலோசனு திடுக்கிட்டுப் போய் பெண்ணின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். சமையல்காரன் உணவு வகைகளைக் கொண்டு வந்து பறிமாறினுன்.

குணேந்திரன் அப்பொழுது கையலம்பிக் கொண்டிருந்தான். அவனும் இவைகளைக் கேட்டான்.

அன்று சாயந்திரம் குணேந்திரன், "இன்று ஹேமாவின் சாதி போய்விட்டது" என்ருன்.

ஹேமா ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படிப்பதில் மூழ்கி இருந்தாள். அவள் தலையைத் தூக்கிப் பாராமலேயே "யார் சொன்னுர்கள்?" என்ருள்.

"யாரோ; போயிற்றே இல்லையோ?"

"கிடையாது. ஒருக்காலும் போகவில்லை. உனது தட்டில் சாப்பிடுவதால் யாருக்கும் சாதி போய்விடாது. இந்தச் சாதிகளை உண்டு பண்ணினவர்களுக்குக்கூடப் போகாது."

குணேந்திரன் அருகிலிருந்த நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டான். "எப்படியிருந்தாலும் நீ செய்தது நன்ருயில்லை. சாதி உள்ளவர்கள் அதை அனுசரித்துத்தான் நடந்துகொள்ளவேண்டும். அதைத் தவிர அம்மாவுக்கும் ரொம்பத் துக்கமாக இருக்கும்" என்ருன்.

ஹேமா சிறிது நேரம் பேசாமல் இருந்து விட்டு திடீரென, "நீ, எல்லாரையும்விட அற்பனு, கீழானவனு? இதை நீ சகித்துக்கொள்வாய்; என்னுல் முடியாது. உனது தட்டில் சாப்பிட்டால் அம்மா துக்கப்படுவாள் என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஆனுல், சாப்பிடாவிட்டால் வேறு ஒருவர்—அம்மாவைவிடப் பெரியவர் ஒருவர் துக்கப்படுவாரே! சரி, நீ போ; இனி என்னுல் வர்ணித்துக் கொண்டிருக்க முடியாது" என்ருள்.

இதைக் கூறிய பிறகு அவள் கையிலிருந்த புஸ்தகத்தை படிப்பதில் மூழ்கினுள்.

குணேந்திரன் சிறிதுநேரம் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருந்தான். பிறகு மெதுவாக எழுந்து சென்று விட்டான். அவனுடைய கண்ணை மறைத்திருந்த கருந் திரை திடீரென்று அகன்றது போலிருந்தது.

## 3

**தை** மாதக் கடைசியில் ஹேமாவுக்கு விவாகம் இனிது நடந்தேறியது! மாப்பிள்ளை ஒரு பெரிய பணக் காரர். ஹேமா தூரத்திலிருந்தபடியே குணீ அண் ணுவை வணங்கி விட்டு விடைபெற்றுச் சென்று விட் டாள். அவளுடைய மாமி, மாமா, நாத்தனூர் யாருமே இல்லை. ஒரு கிழப்பாட்டியும் விவாகமாகாத மைத்துன னும்தான் இருந்தார்கள். அவன் கல்கத்தாவில் ஏதோ ஒரு காலேஜில் படித்துக்கொண்டிருந்தான்.

கிஷோரிபாபுவுக்கு ஏறக்குறைய நாற்பது வயது இருக்கும். முதல் மனைவி இறந்த பிறகு அவர் ரொம்ப நாள் வயதான பெண்ணைத் தேடிக்கொண்டிருந்தார். அதனால்தான் பெண்ணைப் பார்க்காமலே கூட ஹேமாவை மணம் புரிய இசைந்தார். கல்யாணமான பிறகு சுலோசனாவையும் அழைத்தார். சுலோசனாவும் புறப்படத் தயார்தான். நவதீபத்திலிருந்து கொண்டு புண்ணியம் தேட விரும்பினாள்.

ஆனால் ஹேமா தடுத்து விட்டாள். "நீ இருக்கும் வீட்டுக் காற்றுப்பட்டாலே நவதீபத்திலிருக்கும் பாபம் கூட அகலும். அங்கிருந்து கொண்டு நீ புண்ணியம் சம்பாதிக்க முடியாவிட்டால் நீ வைகுண்டம் போனாலும் சம்பாதிக்க முடியாது. அண்ணாவை விட்டு நீ இங்கு வந்தால் நான் அண்ணாவிடம் போய்விடுவேன்" என்று கடிதம் எழுதிவிட்டாள்.

தனது மகளை அவள் நன்கு அறிவாள். ஆகை யால் போவதற்குத் துணிவு கொள்ளவில்லை. ஆனால்

மனது என்னவோ ராத்திரிப் பகலாக நவதீபத்தையே சுற்றிக்கொண்டிருந்தது. இவ்விதமாக ஒரு ஆறு மாதம் கழிந்தது. கடைசியாக ஏதோ ஒரு உத்சவத்தை முன்னிட்டு நந்தாவை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். அங்கே ஹேமா பலவீனமாகவும் உதாசீனமாகவும் இருப்பதைக் கண்டு அதிக வருத்தமடைந்தாள். "இங்கு வேறு யாருமில்லையா உனக்கு உதவி செய்வதற்கு?" என்று கேட்டாள். ஆனால் பெண் ஒன்றும் பேசவில்லை.

உத்சவம் கழிந்துவிட்டது. ஆனாலும் அவளுக்குக் கல்கத்தா போக மனமில்லை. தாயாரின் போக்கைக் கண்டு ஒரு நாள் ஹேமா, "அம்மா,மாப்பிள்ளை வீட்டில் இன்னும் எத்தனை நாளைக்கு இருக்கப் போகிறாய்? ஜனங்கள் என்ன சொல்வார்கள்?" என்றாள்.

சுலோசனா கோபத்துடன். "உன்னை வைத்துக் கொண்டிருக்க முடியாது என்று நன்றாக வாய்விட்டுச் சொல்வதற்கென்ன? அடே, என்ன இருந்தாலும் இதாவது மகள் வீடு. அங்கு நமது சொந்த வீடா இருக்கிறது திரும்பிப் போவதற்கு?" என்றாள்.

ஹேமா திடுக்கிட்டு தாயாரின் முகத்தையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு சாவதானமாக, "உன் பேரில் ஒரு தப்பும் கிடையாது அம்மா; இது பெண் ஜன்மங்களுக்கு இயற்கையாய் அமைந்த குணம்! நாம் நம்மையும், மற்றவர்களையும் ஒரே நாளில் மறந்து விடுகிறோம்" என்றாள்.

நாட்கள் கழியத் தொடங்கின. மீண்டும் துர்க்கா பூஜை வந்தது. குணேந்திரன் தடபுடலாக சீர்வரிசைகள் அனுப்பி வைத்திருந்தான். சுலோசனா, ஹேமாவைத் தனியாக அழைத்துக்கொண்டு போய், "குணீ பிரமசமாஜியாக இருந்தாலும் எல்லாப் பழக்க வழக்கங்களையும் தெரிந்து வைத்திருக்கிறான் பார்" என்றாள்.

"பையன், பெண்ணுக்கு பண்டிகைக்குச் சீர் அனுப்பிவைத்திருக்கிறான். மிட்டாய் வகைகளை அனே

வருக்கும் கொடுத்து விட்டு, சாமான்களை எல்லாம் காட்டிவிட்டு ஊருக்குப் போகிறேன்'' என்று அனைவருடனும் சுலோசனா சொல்லிக்கொண்டாள்.

அவள் போவதைப் பற்றி ஹேமா அதற்கப்புறம் அவளிடம் பிரஸ்தாபிக்கவில்லை. "ஆண்டவன் ஒரு நாளைக்கு உனக்கு உணர்த்துவார். அன்று நீ பிள்ளையை விட்டுப்போவது தாயாருக்கு எத்தகைய துக்கத்தைத் தரும் விஷயம் என்பதை உணருவாய்'' என்று சொல்லிக்கொண்டாள்.

துர்க்கா பூஜை கழிந்ததும் சுலோசனா பலத்த மலேரியாவினால் கஷ்டப்பட்டாள். நாளுக்கு நாள் நிலைமை சங்கடமாயிற்று. ஒரு மாதம் கழித்து ஹேமா, "இப்பவாவது அம்மா, கடவுள் நாமத்தை நினைத்துக் கொள். பிழைக்க விரும்பினால் குணீ அண்ணாவை அழை'' என்றாள்.

பேசப் பேச அவளுடைய இரு கண்களிலும் நீர் நிறைந்தது. மேலே உயரப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"அப்படியே செய் அம்மா, அண்ணாவுக்குக் கடிதம் எழுது.''

ஹேமா குமாஸ்தாவை அழைத்து, அம்மா வரச் சொன்னதாகக் குணேந்திரனுக்குக் கடிதம் எழுதச் சொன்னாள்.

இரண்டு நாளைக்குப் பிறகு கல்கத்தாவிலிருந்து மான்தாவும் வேலைக்காரனும் வந்து சேர்ந்தார்கள். அண்ணா வருவான் என்று ஹேமா எண்ணியிருந்தாள். அவள் மான்தாவை அழைத்து, "குணீ அண்ணா ஏன் வரவில்லை?'' என்று கேட்டாள்.

"அவருக்கு உடம்பு சரியில்லை. இரண்டு வாரங்களாக குளிர் ஜுரமோ இருமலோ வராமலிருப்பதில்லை. இன்னும் ஜுரம் தணியவில்லை. இல்லாதிருந்தால் அவரே வந்திருப்பார்'' என்றான்.

சுலோசனு கல்கத்தா சென்ருள். குணேந்திரன் வேண்டிய சிகிச்சை செய்து இடம் மாற்றுவதற்காக மதுபூருக்கு அனுப்பிவைத்தான். சுலோசனு போகும் போது, “அப்பா குணீ. நீயும் என்னுடன் வா; உனக்கும் உடம்பு சரியாயில்லை. இரண்டு பேரும் போகலாம் வா!” என்ருள்.

ஆனல், குணேந்திரன் அதற்கு இணங்கவில்லை. கல்கத்தாவில் அவனுக்கு வேலை இருந்ததால் போக வில்லை.

மதுபூர் சென்ற பிறகு சுலோசனுவுக்கு உடம்பு குணமாகி விட்டது. நவ தீபத்திற்கும், கல்கத்தா விற்கும் அவள் கடிதம் எழுதினுள். “இன்னும் சற்றுக் குணமானுல் நான் மாசிக் கடைசிக்குள் கல்கத்தா வந்து விடுவேன்” என்று எழுதியிருந்தாள்.

சென்ற தை மாதந்தான் ஹேமாவுக்கு விவாகம் நடந்தேறியது. இன்று அதே மாதம் அதே தேதி வந்து விட்டது. இந்த ஞாபகம் வந்ததும் குணேந்திரன் படிப் பதை நிறுத்திவிட்டு ஜன்னலுக்கு வெளியே வெறித்துப் பார்க்கத் தொடங்கினுன், இதற்குள் வேலைக்காரன் வந்து “தந்தி வந்திருக்கிறது” என்ருன்.

குணேந்திரன் திரும்பிப் பார்த்தான். தந்திச் சேவகன் நின்றுகொண்டிருந்தான். அவன் ஒரு தந்தி யைக் கொடுத்துவிட்டு கையெழுத்து வாங்கிக்கொண்டு சென்றுவிட்டான்.

தந்தியைப் பார்த்ததும் குணேந்திரனுக்கு மிகுந்த ஆச்சர்யம் உண்டாயற்று. ஹேமா புறப்பட்டுவிட்ட தாகத் தந்திகொடுத்திருக்கிருள். ஸ்டீமரிலிருந்த இறங்கி ஹுக்ளி ஸ்டேஷன் வந்து சேருவாள். ஹவாடா ஸ்டே ஷனுக்கு, மூன்று, நான்கு மணிக்கு வண்டி அனுப்பினுல் போதும். எதற்காக வருகிருள்? கூட யார், யார் வருகிருர்கள். கிஷோரி பாபுவும்கூட வருகிருரா? அல்லது தனியாக வருகிருளா? ஒன்றும் தெரியவில்லை.

வீட்டில் வேறு பெண்கள் யாரும் கிடையாது. சுலோசனுவும் மதுபூரில் இருந்தாள்.

இதனுல் குணேந்திரன் மிகுந்த கவலைப்பட்டான். வண்டிக்காரனை ஸ்டேஷனுக்கு அனுப்பி வைத்தான். சாயங்காலம் ஹேமா வந்து சேர்ந்தாள். அவளுடன் வேலைக்கார வேலைக்காரிகளும் சில தேவையான சாமான்களுடன் வந்தனர். ஹேமாவைப் பார்த்ததும் குணேந்திரன் தேகம் முழுவதும் நடுங்கியது. "இதென்ன பைத்தியக்கார வேஷம் போட்டுக்கொண்டு வந்திருக்கிருய். ஹேமா ?" என்ருன்.

ஹேமா அவனை வணங்கினுள்.

"மேலே வா, சொல்கிறேன்."

மேலே சென்று நன்கு உட்கார்ந்த பிறகு. "அம்மா மாசி மாதத்திற்கு முன், வரமாட்டாளா ?" என்ருள்.

"அப்படித்தான் எழுதியிருக்கிருள்" என்ருன்.

"சரி, அது வரையிலும் அவளுக்குத் தகவல் கொடுக்கவேண்டியதில்லை. ஆச்சரியமாக இருக்கிறது. குணீ அண்ணு ! போன வருஷம் இதே தேதியில் நான் விடைபெற்றுக்கொண்டு போனேன். இன்று மறுபடியும் அதே தினத்தில் திரும்பி வந்துவிட்டேன்" என்ருள்.

குணேந்திரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "திரும்பி வந்தேன் என்ருல் ?" என்று கேட்டான்.

ஹேமா மிகச் சாதாரணமாக "திரும்பத்தான், வந்திருக்கிறேனே ! இனி அங்கு எப்படி இருக்க முடியும் ? நான் வெள்ளைப் புடவை கட்டியிருப்பதைப் பார்த்ததும் தெரியவில்லையா ? நேற்றே கர்மம் முதலியவைகள் எல்லாம் முடிந்த பிறகு இன்று இங்கு வந்து சேர்ந்தேன்" என்ருள்.

குணேந்திரன் திகிலுடன் உட்கார்ந்தபடியே இருந்தான். கொஞ்சம் நேரம் கழித்துத் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "தகவல் கூடக் கொடுக்கவில்லையே; அவருக்கு உடம்புக்கு என்ன?" என்ருன்.

"போன புதன் அன்று காலராவின் அறிகுறி. அங்கு கிடைக்கக்கூடிய வைத்தியமெல்லாம் செய்து பார்த்தோம். ஆனல், யாராலும் காப்பாற்ற முடியவில்லை. அடுத்த நாள் பத்து மணிக்கு பிராணன் போய்விட்டது" என்ருள்.

குணேந்திரன் சிறிது நேரம் கழித்து கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "ஆனல் அம்மா இதைக் கேட்டால் செத்தே போய்விடுவாள்! அவளுக்குத் தெரியாதிருக்கிறவரை நல்லது" என்ருன்.

"என்ன செய்வது குணீ அண்ணு? நீங்களெல்லோரும் கடவுளுக்கு விரோதமாகக் காரியம் செய்தீர்கள் எனக்கு அப்பவே தெரியும். ஆனல், அப்போது எனது பேச்சை நீங்கள் கேட்கவில்லை. இப்போது ஐயோ ஐயோவென அழவேண்டியதுதான். ரொம்பப் பசியாயிருக்கிறது. என்ன சாப்பிடட்டும் சொல்லு? எனக்கு ரொம்பக் களைப்பாக இருக்கிறது. இப்போது என் கையால் ஒன்றும் தயாரிக்க முடியாது. கொஞ்சம் பழம் இருந்தாஞல் இன்றையப் பொழுதை அதோடேயே கழித்துவிடலாம்" என்ருள்.

"காலையில்கூட ஒன்றும் சாப்பிடவில்லையா?" என்று குணேந்திரன் கேட்டான்.

"இல்லை. காலையில் அவசரமாக ஸ்டீமருக்கு வர வேண்டி இருந்தது."

மாசிக் கடைசியில் சுலோசனவும் வந்து சேர்ந்தாள். ஆனல், அவள் முற்றிலும் குணமாகி வரவில்லை. அதோடு வீட்டிற்கு வந்து இந்தக் கோலத்தைக் காணவே அவள் மறுபடியும் கட்டிலைப் பிடித்துக்கொண்

டாள். இந்தத் துக்கம் அவள் இதயத்தைத் துளைத்து விட்டது. என்னென்னவோ வைத்தியமெல்லாம் செய்து பார்த்தார்கள். ஆனால் ஒரு பலனும் உண்டாகவில்லை. ஒரு நாள் அவள் குணேந்திரனை அழைத்து, "இனியும் வீணாக ஏன் சிரமப்படுகிறாய்? என்னைச் சற்று சாந்தியுடன் போகவிடு" என்றாள்.

குணேந்திரன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "இப்போது என்னம்மா வந்துவிட்டது? இவ்வளவு கவலைப்படுகிறாயே?" என்றான்.

"சரி அப்பா, நீயே சொல்லு. இனியும் நம்பிக்கை கொள்வதற்கு என்னிடம் என்ன இருக்கிறது?" என்றாள்.

குணேந்திரன் தலைகுனிந்தபடி மௌனமாக உட கார்ந்துகொண்டிருந்தான்.

"அப்பா! நான் ஒன்றும் அப்படி அறியாதவள் அல்ல. நான் தெரிந்தே செய்த பாவம் நிமிஷத்திற்கு நிமிஷம் என் உள்ளத்தை வாட்டுகிறதே?" என்றாள்.

சிறிது பேசாமல் இருந்துவிட்டு மறுபடியும் "ஒரு விஷயம் உன்னிடம் கேட்கிறேன், ஒளிக்காமல் சொல்லி விடு. உனக்கு நன்கு தெரியும். நீ முன்பு ஒரு தரம் ஹேமாவை நேசித்தாய், மறுபடி இன்னொரு தரம் முயற்சி செய்தால் அவளை நேசிக்க முடியாதா?" என்றாள்.

குணேந்திரன் தலைகுனிந்தபடியே "அவளைத்தான் வாழ்வு பரியந்தம் நேசிக்கிறேனே அம்மா! அப்போதும் நேசித்தேன். இப்போதும் நேசிக்கிறேன். அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். என் உயிர் உள்ள வரையில் அவளுக்கு ஒரு கஷ்டமும் வராது" என்றான்.

"இது எனக்குத் தெரியும். சரி, உங்களிருவருக்கும் இதுவே கடைசி ஆசீர்வாதம். எப்படியாவது அவசியம் நேர்ந்தால் அவளிடம் இதைச் சொல். அதோடு இன்

ஞெரு விஷயம் அப்பா? இங்கிருக்கும்போது ஹேமா மாமனுர் வீட்டிலிருந்து கடிதம் எழுதியிருந்தாள். 'அம்மா நீ இருக்கும் வீட்டுக் காற்றுப் பட்டாலே நவ தீபத்தைப் பிடித்த பீடையெல்லாம் போகுமே. அந்த வீட்டிலிருந்துகொண்டு நீ புண்ணியம் சேர்க்க முடியாது' என்றிருந்தது அந்தக் கடிதத்தில். ஆகையால் அப்பா, எனது தலைமீது கைவைத்து ஆசீர்வாதம் செய். எனது பாபமெல்லாம் தொலையட்டும். எனது குற்றம் எவ்வளவு பெரியது தெரியுமா? என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது" என்ருள்.

குணேந்திரன் அழத் தொடங்கினுன். உண்மையாகவே குணேந்திரன் சுலோசனுவை தாயார்போலவே கருதி வந்தான்.

மறுபடியும் சுலோசனு, "நான் ஹேமாவிடம் சொல்லிப் போவதற்கு ஒன்றும் இல்லை. அவள் முகத்தைப் பார்த்தாலே என் இதயம் பிளந்துவிடும் போல் இருக்கிறது. உலகத்திலே சிறிய தாயாரைப் பற்றி பல கதைகள் உண்டு. ஆனுல், நான் அந்தச் சிறிய தாயாரைவிடக்கூட அதிகமாகக் கேடு செய்தவளாவேன்" என்ருள்.

அடுத்த நாள் நோய் அதிகரித்துவிட்டது. மூச்சு வாங்குவதற்கு கஷ்டமாய்விட்டது. அப்போது அவள் ஹேமாவை அழைத்தாள். முத்தமிடுவதற்கு அவள் கையைப் பிடித்ததும் அழத் தொடங்கினுள். "ஹேமா நான் போய்வருகிறேன்" என்ருள்.

ஹேமா தாயார் மார்பின்மீது விழுந்து அழுதாள். அவளை எழுந்திருக்கச் சொல்லி, "அழாதே அம்மா! எத்தனையோ இன்பதுன்பங்களுக்கிடையில் பதினைந்து வருஷமாக உன்னை மார்போடணைத்து வளர்த்தேன். இன்று காலம் வந்துவிட்டது. உனது தந்தையிடம் போகப் போகிறேன். இன்றுதான் எனக்கு சந்தோஷகரமான நாள். இன்று நான் அழக்கூடாது. ஹேமா

உன்னை இந்தக் கோலத்திற்குள்ளாக்காதிருந்தால் இன்று சிரித்துக்கொண்டு ஆனந்தமாக போவேனே! இன்று வெட்கத்தாலும் துக்கத்தாலும் உனது முகத்தைக்கூடப் பார்க்க முடியவில்லையே ஹேமா'' என்றாள்.

ஹேமா அழுதுகொண்டே "இப்படி ஏன் பேசுகிறாய் அம்மா? என் தலையெழுத்துப்படி நடந்தது. இதற்கு நீ என்ன செய்வாய்?'' என்றாள்.

சுலோசனா தடுத்து, "என் கையைக் கொண்டே கண்ணைக் குத்திக்கொண்டேன். தலையில் எழுதியிருந்தபடி நடந்தது என்று நீ சொல்கிறாய். நான் இடையில் தலையிடாதிருந்தால் உனது தலைவிதியைப்போல இந்த உலகத்தில் வேறு யாருக்கும் கிடையாது. எனக்கு எல்லாம் தெரியும். இந்தத் துக்கத்தைப் போக்குவதற்கு ஒரு வழியும் காணோமே! அறியாமல் செய்துவிட்ட பாபத்திற்கு பிராயச்சித்தம் இருக்கிறது. ஆனால், அறிந்தே செய்த பாபத்தை போக்குவதற்கு வழி ஏது?'' என்றாள்.

அவளுடைய கண்களிலிருந்து பெரிய பெரிய நீர்த் துளிகள் உருண்டு விழுந்தன. ஹேமா தனது முந்தானையால் அவளுடைய கண்ணீரைத் துடைத்தாள். சிறிது நேரம் கழித்து மறுபடியும் சுலோசனா, "பெற்ற தாய் பேரில் கோபம் கொள்ளாதே அம்மா! சொன்னால் உனக்கு ஒன்றும் மனக்கஷ்டம் உண்டாகக்கூடாதே என்றுதான் சொல்லவில்லை. இல்லாவிட்டால் இன்று இறக்கும்போது கையெடுத்துக் கும்பிட்டுச் சொல்கிறேன்.''

ஹேமா உடனே அவள் வாயில் கையை வைத்து தடுத்து, "என்ன செய்தால் நீ மகிழ்ச்சி அடைவாய் சொல்லு; நான் அதையே செய்கிறேன். நான் எப்போதும் உனது பேச்சை மீறினது இல்லையே அம்மா!'' என்றாள்.

சுலோசனா மிகுந்த சிரமத்துடன் தனது நடுங்கும் கரத்தை ஹேமாவின் சிரசின்மேல் வைத்துக்கொண்டு,

"இதனுல்தான் நான் சதா வேதனைப் படுகிறேன் ஹேமா; சொல்லவேண்டியதை குணியிடம் சொல்லி விட்டேன். சந்தர்ப்பம் நேரும்போது அவனே உன்னிடம் சொல்லுவான். இன்று நீ இந்தப் புடவையை மாற்றிக் கட்டிக்கொண்டு வா. ஒரு வருஷத்திற்கு முன் நீ உடுத்திக்கொண்டு வந்த சேலையையும், அணிந்து வந்த நகைகளையும் தரித்துக்கொண்டு வா. ஒரு கண நேரமாவது என் பாபத்தைப் போக்கு" என்ருள்.

ஹேமா தாயாரின் விருப்பப்படியே மௌனமாக எழுந்து சென்று உடை உடுத்தி வந்தாள். தாயார் சிறிது திருப்தி அடைந்தவள் போல தோன்றினுள். அவள் மிகுந்த கவலையுடன் "இந்த நாற்பது வருஷ வாழ்விலே எப்போதும் தோன்ருத ஒரு புத்தி அன்று மதுபூரிலிருந்து திரும்பி வந்து உன்னைப் பார்த்ததும் உண்டாகியது. 'இடி விழுந்த மாதிரி' என்று ஜனங்கள் சொல்வார்கள். ஆனுல் அது எப்படி இருக்குமோ எனக்குத் தெரியாது. அன்று எனக்கு உண்டான அதிர்ச்சியில் பாதியளவாவது இடி இழுவதில் உண்டாகுமானுல் அந்த இடி எனது விரோதி பேரில்கூட விழ வேண்டாம். நான் ஆணையிட்டுச் சொல்கிறேன். ஹேமா, நீ இந்த ஆடைகளையே அணிந்து வரவேண்டும். எந்தக் கல் நெஞ்சன் விதவைகளுக்கென்று இம்மாதிரி ஆடைகளை ஏற்படுத்தினுனே? இன்று அவனை நான் சபிக்கிறேன். என்னைப் போலவே அவனும் பெருத்த வேதனையை ஏற்கட்டும் என்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். வேண்டாம், ஹேமா; என்னைத் தடுக்காதே. நாளையோடு நான் ஒன்றும் சொல்ல முடியாது போய்விடும். நான் இன்று உனது தந்தையிடம் போகப் போகிறேன்" என்று கூறினுள்.

பிறகு அவள் பேசுவது தடைப்பட்டு விட்டது. ஹேமா, முந்தானையால் மெதுவாக அவளது கண்ணீரைத் துடைத்தாள். வெளியில் காலடி ஓசை கேட்கவே ஹேமா திரும்பிப் பார்த்தாள். அதற்குள் டாக்டருடன் குணேந்திரன் அறைக்குள் நுழைந்தான். சுலோசனு

மிகுந்த வியாகூலத்துடன், "இப்போது டாக்டரை ஏன் அழைத்து வந்தாய்? அவரை அனுப்பிவிட்டு நீ இங்கு வந்து உட்கார்" என்றுள்.

"வந்த பிறகு ஒரு தரம்தான் பார்த்துவிட்டுப் போகட்டுமே—"

"வேண்டாமப்பா வேண்டாம். அவரைப் போகச் சொல்லு."

ஆங்கிலேய டாக்டருக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு உட்கார்ந்து கொண்டு சட்டைப் பையிலிருந்து தர்மா மீட்டரை எடுத்தார்.

சுலோசன சிறிது கோபத்துடன், "இவன் புத்தியைப் பாரு! இந்தச் சின்னஞ் சிறு குழலா எனது நோயைக் கண்டு பிடிக்கப் போகிறது? போய் நந்தாவை ஒரு நல்ல வைத்தியனைக் கூட்டிவரச் சொல்லு. என் பிராணன் எப்பொழுது போகிறது என்பதைத் தெரிந்து கொள்கிறேன். மருந்து கொண்டுவரக் கூடாது என்று சொல்லியனுப்பிவிடு" என்றுள்.

சுலோசனுவினுல் கேஸ் லைட்டின் பிரகாசத்தைப் பார்க்க முடியவில்லை. மெழுகுவர்த்தி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இருட்டியவுடன் வேலைக்காரன் விளக்கேற்றிக்கொண்டு வந்து மேஜைமீது வைத்தான். "இன்றைய இரவுதான் கடைசி இரவு. இன்று மனதிலுள்ளதைப் பூராவும் சொல்லிவிட்டால் ஆண்டவன் அதிகத் தண்டனையை அளித்துவிடுவான். துளிக்கூட குற்றமற்றதைத் தடுக்காதே. எனது பாபத்தின் பலன் என்னேடேயே போகட்டும்" என்றுள் சுலோசனு.

இதன் பிறகு அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு ஒரு நெடுமூச்சுடன், 'ஐயோ!' என எழுந்திருக்க முயன்றுள். ஹேமா பயத்துடன் "என்ன அம்மா?" என்றுள்.

சுலோசனு மெதுவான குரலில், “ஒன்றுமில்லை அம்மா. நீ தனியாகத்தான் இருக்கிருயா? குணியினுடைய முகத்தை என் மனக் கண்ணில் பார்த்தேன். கல்நெஞ்சனுக்குக்கூட அம்முகத்தின் பேரில் இரக்கம் உண்டாயிருக்கும். ஆனல், எனக்கு உண்டாகவில்லை. அவன் நமக்காக என்ன தான் செய்யவில்லை? சரி இந்த வார்த்தைகளை இனிப் பேசிப் பிரயோஜனமில்லை. எப்போதும் அவன் பேச்சைத் தட்டிவிடாதே. அவன் மனம் புண்பட்டால் பகவான் மனமும் புண்படும் என்பதை ஒருநாளும் மறந்துவிடாதே. அவனுடைய தர்மம் தான் உன்னுடைய தர்மமும். இது என்னுடைய விருப்பம் மாத்திரமல்ல. யாருடைய விருப்பத்தினுல் நீங்களிருவரும் சந்தித்தவுடனேயே பிரிக்க முடியாதவர்களானீர்களோ அவனுடைய விருப்பமுமாகும். ச்சீ, எதற்காக வெட்கம் அடைகிருய்? மனசாட்சி கூறுவதை அலட்சியம் செய்யாதே. நான் அதைக் கேட்டும் கேட்காதவள்போல கர்வத்தால் அலட்சியம் செய்துவிட்டேன். அதனுல்தான் இன்று அதன் பலனை அனுபவிக்கிறேன். உங்களிருவருக்கும் நான் சொல்வது என்னவென்ருல்—எனது அந்த நியாயத்தை, பாபத்தை வாழ்நாள் பூராவும் ஏற்றுக் கொள்ளாதீர்கள்” என்ருள்.

“வைத்தியர் வந்திருக்கிருர்” என்று வேலைக்காரன் சொன்னுன்.

“சரி, அவரை அழைத்து வா. நீ வெளியில் போ அம்மா” என்று சுலோசனு சொன்னுள்.

## 4

தாயாருடைய மரணத்திற்குப் பிறகு மேஹாவின் நடத்தையில் விசித்திரமான மாறுதல் தென்பட்டது. முற்றிலும் மாறுபட்டுக் காணப்பட்டாள். குணேந்திரன

மிகுந்த பொறுமைசாலி. இந்த மாறுதலை அவனும் கவனித்தான். ஆனால், அவன் ஒன்றும் தெரியாதவன் போல மௌனமாக இருந்தான். திடீரென்று ஹேமா வுக்கு மத விஷயங்களில் எப்படி சிரத்தை உண்டா யிற்றோ அது அவளுக்குத்தான் தெரியும். அவள் நாடகம்; நவீனம் முதலியவைகளை எடுத்து தூரத்தில் கட்டி வைத்துவிட்டாள். ராமாயணம், மகாபாரதம், கீதை, உபநிஷதம் முதலியவைகளைப் படிப்பதிலேயே மூழ்கினாள். தாயார் சொல்லை மீறி அவள் வெள்ளைச் சேலையை அணியவில்லை. அதோடு அணிந்திருந்த நகைகளையும் அணியாமலில்லை. ஆனாலும், வைதவ் யத்தை மற்ற வழிகளில் மிகச் சிரத்தையுடன் கடைப் பிடித்தாள். தன் கையாலேயே சமைத்து உண்டாள். வீட்டு வேலைகளில் ஒய்வு கிடைத்தபோதெல்லாம் சாஸ் திரங்கள் படிப்பதிலேயே காலம் கழித்தாள். எப்ப வாவது குணேந்திரன் வந்தால்கூட, அவனைக் கண்டு பயப்படுபவள்போல ஏதோ காரணத்தைக் கூறிவிட்டு அப்புறம் சென்றுவிடுவாள். இப்படி, தான் போய்விடு வதால் குணேந்திரன் மிக துக்கமடைகிறான் என்பதும் அவளுக்குத் தெரியும். நாளுக்கு நாள் அவளுடைய நடத்தையும் மிக மாறுபட்டது. ஜெயிலதிகாரி கைதி யைக் காவல் காப்பதற்காக தன்னையும் சிறைப்படுத்திக் கொள்வதைப்போல, அவளும் தன் இதயத்திலுள்ள ஒரு பெரிய குற்றவாளியைக் காவல் காப்பதற்காக தன்னை அம்மாதிரி சிக்ஷைக்கு உட்படுத்திக் கொண் டாள்.

ஒரு நாள் திடீரென. வந்து, "குணீ அண்ணா, நான் தீக்ஷை பெற்றுக்கொள்ளப் போகிறேன்!" என்றாள்.

குணேந்திரன் அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டு, "என்ன தீக்ஷை, குரு தீக்ஷையா!" என்றான்.

"ஆமாம்."

குணேந்திரன் சிரித்துக்கொண்டு, "ஒன்றும் பயப்படவேண்டாம். ஹேமா உன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, தினம் தினம், புதிய புதிய கவசம் அணிய வேண்டியதில்லை" என்றான்.

இந்த வார்த்தை அவளுக்கு அர்த்தமாகவில்லை போலிருக்கிறது. அவள் சிறிது நேரம் அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்து விட்டு, "குருதீக்ஷை பெறவேண்டாமா?" என்றாள்.

"ஆம் பெறவேண்டும். ஆனால், உனக்கு வயது போதாதே. அதோடு, உங்களுக்குக் குரு யார் என்று எனக்குத் தெரியாது?" என்றான்.

"அந்தக் குருவிடத்தில் எனக்கு வேலை இல்லை. நான் உன்னிடத்தில் தீக்ஷை பெற்றுக்கொள்கிறேன்."

குணேந்திரன் ஆச்சரியத்துடன், "என்னிடமா? தீக்ஷையும் கீக்ஷையும் என்ன தெரியும்? அது தவிர நீயோ ஹிந்து; நானோ பிரமசமாஜி" என்றான்.

"அது எனக்குத் தெரியாது. உன்னுடைய தர்மம் தான் என்னுடைய தர்மம் என்று அம்மா சொல்லிப் போனாள். சரி, குணீ அண்ணா, இதற்கு என்னதான் அர்த்தம்?"

இதற்கு என்ன அர்த்தம் என்பது குணேந்திரனுக்குத் தெரியும். ஆனால் அவன் அதைக் கூறாமல், "ஒரு சமயம், அம்மா கருத்து எல்லா தர்மமும் ஒன்று, என்பதாயிருக்கும்" என்றான.

"ஆனால் எல்லாத் தர்மமும் ஒன்றல்வா?"

குணேந்திரன் பேசாமலிருந்துவிட்டு, "ஹேமா நான் இந்த விஷயங்களைப்பற்றி பிறருடன் விவாதம் செய்ததில்லை" என்றான்.

"ஆனால், நான் அந்நியளல்லவே?"

" நீ அந்நியள் அல்லதான். இருந்தாலும், உன்னேடுகூட அந்த விஷயத்தைப்பற்றி விவாதம் செய்ய மாட்டேன்."

ஹேமா மிகுந்த வருத்தத்துடன், "நீ சொல்லித் தராவிட்டால் எனக்கு எப்படித் தெரியும் ?" என்ருள்.

குணேந்திரன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டு, "நீ என்ன தெரிய விரும்புகிருய் ?" என்ருன்.

" குணீ அண்ணு, நான் உனது எச்சில் தட்டில் சாப்பிட்டபோது தடுத்தாய். 'நீ செய்தது சரியல்ல தங்கள் தங்கள் சாதியாசாரப்படிதான் நடக்கவேண்டும்' என்ருய். ஆனல் இன்றே எல்லா தர்மமும் ஒன்று என்று சொல்கிருய். இதில் எந்தப் பேச்சு நிஜம் ?"

" அன்று நான் அப்படித்தான் கூறினேன். இரண்டு பேச்சும் உண்மைதான். சாதி வேறு, மதம் வேறு என்பதைத் தெரிந்துகொள். சாதி என்பது வெறும் தேசாசாரம். இந்த லோகத்தைப்பற்றியவிஷயம். ஆனல், மதமோ, இகம், பரம் இரண்டையும் பொறுத்த விஷயம். மதத்தை ஒப்புக்கொள்வதால் மட்டும் சாதியை ஒப்புக் கொண்டதாகாது. அம்மாதிரியே சாதியை ஒப்புக் கொள்வதால் மட்டும், மதத்தை ஒப்புக் கொண்டதாகாது. சாதியை ஒப்புக்கொள்ளாவிட்டால் அநேக கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டி இருக்கும். எல்லோரும் அக் கஷ்டங்களை ஏற்க முடியாது. அதற்கு அவசியமும் இல்லை. அதனல்தான் அன்று உன்னிடம் அம்மாதிரி கூறினேன்."

பிறகு சிறிது பேசாமலிருந்துவிட்டு மறுபடியும், "ஹேமா, இந்த இரண்டு விஷயமும் ஒன்ருகவும் இருக்கிறது; பிரிந்தும் இருக்கிறது; இட மாறுதலினல் தர்மத்திலும் அநேக மாறுதல்கள் இருக்கின்றன. ஆனல், அவைகளின் அடிப்படையான தர்மம் ஒன்றுதான். 'மரணமே நமது முடிவு அல்ல' இதுதான் அந்த

அடிப்படையான விஷயம். இந்த உண்மையை வைத்துக்கொண்டு நீ ஹிந்து என்கிருய், நான் பிரமசமாஜி என்கின்றேன். சர்வ மதங்களும், ஈஸ்வரனை நம்புவதோடல்லாமல், மரணத்தால் மட்டும் விடுதலை கிடைத்துவிடாது என்பதை நாகரீகமடைந்த தேச மதங்களிலிருந்து அநாகரீகமாயுள்ள தேச மதங்கள் வரை அனைத்தும் கூறுகின்றன. மரணத்தைப் பற்றி நீயும் சிந்திக்கிருய். நானும் சிந்திக்கிறேன். நாமிருவரும் வெவ்வேறு வழிகளில் வேண்டுமானுல் சிந்திக்கலாம். ஆனுல், சிந்திக்கப்படுவதென்னவோ ஒரே விஷயத்தைப் பற்றியதுதான். அம்மா இறக்கும்போது இதைத்தான் உன்னிடம் கூறிச் சென்றிருக்கிருள்" என்ருன்.

ஹேமா ரொம்ப நேரம் பேசாமலிருந்துவிட்டு பிறகு, "சிந்திப்பதால் என்ன பிரயோஜனம்? அதற்கு ஏதாவது வ ; தேட வேண்டாமா?" என்ருள்.

"ஆமாமாம். அந்த வழியைத் தேடுவதில்தான் இத்தனை விவாதங்களும், சண்டைகளும் உண்டாகின்றன. உன்னுடைய வழி எனக்குப் பிடிப்பதில்லை. இது அநுமானிக்கிற விஷயம், பிரத்தியட்ச விஷயம் அல்ல, என்று சொன்னுல்கூட விவாதம் ஒய்வதில்லை. சண்டையும் ஒழிவதில்லை. சரி உனக்கு சமையலுக்கு நேரமாகிவிட்டது ஹேமா!"

ஹேமா வேறு ஒன்றும் கூருமல் மெதுவாக எழுந்து சென்றுவிட்டாள். குணேந்திரன் சூன்ய திருஷ்டியுடன் வெறும் வெளியைப்பார்த்துக் கொண்டிருந்தான்.

"குணீ அண்ணு!"

குணேந்திரன் திடுக்கிட்டு, "ஏன் ஹேமா?" என்ருன்.

"நான் போய்க்கொண்டிருக்கிற வழி சரிதாஞ?"

"எப்படிக் கூறமுடியும் ஹேமா? இது உனக்குத்தான் தெரியும். அதில் உனக்குச் சுகம் கிடைத்த

தானல், சாந்தி கிடைத்ததானல் நிச்சயம் அது சரியான வழிதான்.''

"ஆனல், எனக்கு அவைகள் ஒன்றும் கிடைப்பதில்லையே?''

அவளுடைய வேதனை மிகுந்த குரலைக் கேட்கவும் குணேந்திரன் கண்களிலும் நீர் நிறைந்தது. அவன் சிரமத்துடன, "பின் ஏன் அவ்வழியைப் பின்பற்றுகிருய்?'' என்ருன்.

"அதுதானே தெரியவில்லை. யாரோ என்னை அவ்வழியில் இழுத்துச் செல்கிருர்கள். என்னை நானே தடுக்க முடிவதில்லை.''

குணேந்திரன் இதற்கு என்ன சொல்வான்? ஒன்றும் அவனுக்குத் தோன்றவில்லை. இருந்தாலும் அவன் "வாஸ்தவம்தான்; புதிதாக இருப்பதால் இப்போது சுகம் கிடைக்காதிருக்கலாம். பின்னல் அவசியம் கிடைக்கும்'' என்ருன்.

ஹேமா உற்சாகத்துடன், "கிடைக்குமா?'' என்ருள்.

"அவசியம் கிடைக்கும். தர்மத்திலே சுகமும், சாந்தியும் கிடைக்காவிட்டால், வேறு என்னத்தில் கிடைக்கப்போகிறது? நான ஆசீர்வதிக்கிறேன. ஒரு நாளைக்கு நீ அவசியம் சுகமடைவாய்.''

இரண்டு நாளைக்குப் பிறகு குணேந்திரன் மேல் மாடியில் சந்திர வெளிச்சத்தில் படுத்துக்கொண்டிருந்தான. ஹேமா அங்கு வந்து அவன் கால் அருகில் உட்கார்ந்தாள்.

"காலைப் பிடித்து விடட்டுமா அண்ணு'' என்ருள்.

குணேந்திரன் 'சரி' என்று கூறிவிட்டு கண்ணை மூடிக்கொண்டான். சந்திர வெளிச்சத்தில் பிரகாசிக்கும் ஹேமாவின் முகத்தைப் பார்க்க அவனுக்குத் துணிவு

உண்டாவில்லை. ஹேமா மெதுவாக அவன் காலை வருடிக்கொண்டிருந்தாள். சற்று நேரத்திற்குப் பிறகு, "குணீ அண்ணு, விதவா விவாகம நல்லதா?" என்ருள்.

குணேந்திரன் கண்களை மூடியபடியே, "உனது அபிப்பிராயம் என்ன?" என்ருன.

"நான் அபிப்பிராயம் கூற வரவில்லை. தெரிந்து கொள்ள வந்திருக்கிறேன்."

"காலைப் பிடிக்கிறேன் என்று சொன்னபோதே எனக்குத் தெரியுமே! எதற்கோ பீடிகை போடுகிருய் என்று."

ஹேமா ரொம்பச் சாதாரணமாக, "இல்லை, இல்லை. உனது கால் அருகில் உட்கார்ந்ததும் எனக்கு உனது காலைப்பிடித்துவிடலாம் என்று தோன்றியது" என்ருள்.

குணேந்திரன் ஒன்றும் கூருமல் மௌனமாக இருந்தான்.

"ஊம், சரி, சொல்லு."

குணேந்திரன் மேலும் பேசாமலிருக்கவே, ஹேமா அவனுடைய காலை மெதுவாகக்கிள்ளிவிட்டு, "சொல்லு சீக்கிரம்" என்ருள்.

"சொல்கிறேன். முதலில் எனது கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டும்."

"ஊம், சரி."

"நீ உனது புருஷனைக் காதலிக்கவில்லையா?"

"கிடையவே கிடையாது. இந்த எண்ணம் என் மனதில்கூட எழவில்லை. அங்கிருந்து நான் ஒரு சல்லிக் காசுகூடக் கையில் கொண்டு வரவில்லை. அவர்கள் வாங்கிக் கொடுத்த துணியைக்கூட உடுத்தி வரவில்லை. நான் சாப்பிட்டதற்கு நான்கு மடங்கு அதிகமாகச்

செய்து வந்திருக்கிறேன். இதுதான் எனக்கும் அவருக்கும் இருந்த உறவு."

ஆனல், பதிவிரதையாயிருப்பவள் தன் புருஷனிடம் அன்பு செலுத்துகிருள். விதவையாகிவிட்ட பின்புகூட அவனையே நினைத்துகொண்டு மறு விவாகம் செய்துகொள்வதில்லை. அவர்கள் இறக்கும்போதுகூட உனது தாயாரைப் போலவே கணவனிடம் செல்வதாக எண்ணிக் கொள்கிருர்கள்."

"என்னை நீங்களெல்லாம் சேர்ந்து வலுக்கட்டாயமாகக் கலியாணம் செய்து கொடுத்தீர்கள். நானும்கூட பதிவிரதைதான். இறக்கும்போது நானும், உனனிடம் வருவதாக எண்ணிக்கொள்வேன். சரி குணீ அண்ணு, இறந்த பிறகு உன்னை அடைவேனு?"

அவளுடைய பேச்சிலே சலனமிருக்கவில்லை, சந்தேகமிருக்கவில்லை, பெயருக்குக்கூட வெட்கம் கலந்திருக்கவில்லை. வேருெருவருடைய விஷயமாகப் பேசிக்டிருப்பதைப் போலிருந்தது. ஹேமா தான் பேசுகிருளா என்று சந்தேகிக்கும்படி இருந்தது. குணேந்திரன் வியப்படைந்து விட்டான. ஹேமா மறுபடியும், "சொல்லு, உன்னை அடைவேனு?" என்ருள்.

"முடியாது" என்ருன் குணேந்திரன்.

"ஏன் முடியாது?"

"எனது கர்ம பலன் என்னை எங்கு கொண்டு போகுமோ. உனது கர்ம பலன் உன்னை எங்கு கொண்டு போகுமோ, இது யாருக்குத் தெரியும்? எனது கர்ம பலத்தால் நான் ஒரு மிருகமாகலாம். நீ மறுபடியும் ஒரு பிராமணன் வீட்டில் வந்து பிறக்கலாம். அப்படியானல் நீ என்னை எப்படி அடைய முடியும். கர்மபலன் உண்மையானல், கணவன் மனைவி இறந்த பிறகு சேருவது என்பதெல்லாம் சுத்தப் பொய். நாம் கறபித்துக்கொண்ட இந்த உறவு ரொம்ப அற்பமானது. இந்த வித்தியாசங்களை, இந்த வேற்றுமைகளை

நாம் கண்ணாரப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இவைகள் எல்லாம் நடப்பவை, கர்ம பலன் ஆகும். இதைக் காதல் ஒன்றும் அசைக்க முடியாது. இந்த உலகத்திலே துன்மார்க்கக் கணவன்மார்களுடைய மனைவிகள் பதிவிரதையாயிருக்கிறார்கள். அவர்களுடைய புருஷர்கள் இறந்து காளைமாடுகளாகப் பிறக்கிறார்கள் என்று வைத்துக்கொள். இது உனது சாஸ்திரப்படி நடக்கக் கூடியதுதான். அந்தப் பெண்கள் எத்தனையோ நல்ல காரியத்தைச் செய்துவிட்டு இந்தக் காளைமாடுகளோடு வாழ்க்கை பூராவும் கட்டுப்பட்டிருக்கவேண்டும் என்று நீ சொல்லுகிறாயா? அது அப்படி நடக்காது. அப்படி நடந்தால் நல்ல கர்மத்திற்கும் கெட்ட கர்மத்திற்கும் என்ன வித்தியாசம் இருக்கப் போகிறது? பெண் தன் புண்ணியத்தால் ஸ்வர்க்கமடையலாம். ஆண் தன் பாவத்தால் ஜன்ம ஜன்மாந்திரங்களுக்கு நரகத்திலேயே உழலலாம். என்னதான் செய்தாலும் இவர்களிருவரும் ஒன்று சேருவதற்கு வழி இருக்குமா?''

ஹேமா வெகு நேரம் வரையிலும் யோசித்துக் கொண்டே இருந்தாள். பிறகு மெதுவாக, "ஆனால். உண்மையில் சந்திப்பதற்கு வேறு வழியே இல்லையா?" என்றாள்.

"இல்லை, அதற்கப்புறம் அவசியம் இல்லை. இதைவிட, யார் எல்லாரையும்விட பெரியவனோ, யாரை அடைந்துவிட்டால் பின் எவரையும் அடைய இச்சை கொள்ளாதோ, அவருடைய சந்திப்பிற்கு ஆசைப்படு. உன்னுடைய இந்த மார்க்கத்தில் யாரும் தடையாக இருக்க முடியாது. நாங்கள் கொடுத்திருக்கும் துக்கமனைத்தும் நொடிப் பொழுதில் அகன்றுவிடும். இதுதான் எனது மனப்பூர்வமான ஆசியாகும்.'' சந்திர வெளிச்சத்திலே குணேந்திரனுடைய கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் உதிருவதை ஹேமா கண்டாள் அவன்காலின் மேல் சிரசை வைத்து நமஸ்கரித்துவிட்டு அவள் மெதுவாக எழுந்து சென்றுவிட்டாள். இம் மாதிரியே அவள் பலதடவை எழுந்து சென்றிருக்கிறாள்,

ஆனல் இன்றோ, அவனுடைய பொறுமையையும், அணைபோட்டுத் தடுத்து வைத்திருந்த மனோ எழுச்சி களையும் அடியோடு தகர்த்தெறிந்துவிட்டுப் போய் விட்டாள். 'வாழ்வின் இன்பம் கண்ணெதிரில் கரை புரண்டு ஓடுகிறது. அதைக் கைகொண்டு அள்ளிப் பருக முடியவில்லையே?' என்ற ஒரே ஏமாற்றம்தான் அவன் உள்ளத்தை வாதனைப் படுத்தியது. ஹேமா அவனை எங்ஙனம் காதலிக்கிருள் என்பதெல்லாம் அவ னுக்கு நன்கு தெரியும். இன்று அவளே வாய் திறந்து சொல்லிய பிறகுகூட அவன் மனதிலுள்ளதை சொல்ல முடியவில்லை. சுலோசன இறந்த பிறகு, 'சொல்லலாம் சொல்லலாம்' என்று நினைத்துக்கொண்டிருந்துவிட்டு சொல்லாமலே விட்டுவிட்டான். அவளிடம் ஒரு நாகம் குடி இருப்பது போலவும், அவளைத் தொடுவதற்குக் கை நீட்டினுல் அது படம் எடுத்துக்கொள்வது போலவும் அவனுக்குப்பட்டது. இம்மாதிரியான பயம்தான் இத்தனை நாளும் அவனை மௌனமாக்கி வைத்திருக் கிறது. இன்று இந்தச் சந்தர்ப்பத்தில்கூட அந்தப் பயம் தான் அவனை மௌனமாக்கிவிட்டது.

ஹேமா அதிகாலையில் ஸ்நானம் செய்துவிட்டு குணேந்திரனை வணங்கி வருவது வழக்கம். அடுத்த நாள் அவள் வந்ததும் குணேந்திரன் தன் மனதி லிருந்த வெட்கத்தை எல்லாம் அகற்றிவிட்டு, "ஹேமா, நேற்று நீ விதவா விவாக விஷயம் பற்றி எதற்காகக் கேட்டாய்?".

"ஒரு பத்திரிகையில் படித்திருந்தேன்" என்ருள்.

"அதை நீ சரி என்று நினைக்கிருயா?"

ஹேமா உடனே, "ராம ராம! அது!கூட ஒரு கலியாணமா?" என்ருள்.

"ஏன் கலியாணமாகாது? ஹிந்துக்களைத் தவிர உலகத்தில் மற்றெல்லாச் சாதியார்களும் விதவா விவாகம் செய்து கொள்கிருர்களே?"

"அதனால் நமக்கென்ன?" என்று கூறிவிட்டு, ஹேமா எழுந்து போகத் தொடங்கினாள். குணேந்திரன் அவளைக் கூப்பிட்டு, "இன்னும் ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது ஹேமா" என்றான்.

ஹேமா திரும்பி நின்றுகொண்டு "என்ன?" என்றாள்.

"உன்னுடைய வயது என்ன?"

"பதினாறு."

"இந்தச் சின்ன வயதிலிருந்து நீ சந்நியாசியாகவே காலங்கழிக்கப் போகிறாயா?"

ஹேமா மிருதுவான புன்சிரிப்புடன், "பின் என்னதான் செய்வேன்? என் விதியைப் போலத்தான் உன் புத்தியும் இருக்கிறது!" என்றாள்.

குணேந்திரன் சிறிது நேரம் வரையிலும் ஹேமாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு, "இதற்கு வேறு ஒரு வழியும் கிடையாதா?" என்றான்.

"இல்லை குணீ அண்ணா, ஒரு வழியும் கிடையாது" என்று கூறிவிட்டு ஹேமா சென்றுவிட்டாள்.

நாளுக்கு நாள் யௌவனத்தில் சௌந்தர்யம் ஹேமாவின் ஒவ்வொரு அங்கங்களிலும் பரிபூரணமாக நிறைந்து வந்தது. அவளும் தர்ம விஷயங்களில் அதிக சிரத்தை காட்டினாள். குணேந்திரன் சகலத்தையும் பார்த்தான். ஆனால், அவனால் ஒன்றும் வாய் திறந்து கூறமுடியவில்லை. ஹேமாவைக் கண்டால் எல்லோரும் பயந்துதான் வந்தார்கள். அவளுடைய தாயாருக்குக் கூட அவளைக்கண்டால் பயந்தான். குணேந்திரனுக்கும் அப்படித்தான்.

இதற்குப் பல நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் குணேந்திரன் கச்சேரிக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். இதற்குள் ஹேமா வந்தாள். அலமாரியைத்

திறந்து செக் புத்தகத்தை எடுத்து குணேந்திரனிடம் கொடுத்துவிட்டு, "வரும்போது பாங்கியிலிருந்து ஐநூறு ரூபாய் வாங்கிக்கொண்டுவா" என்றாள்.

"சரி" என்று கூறிவிட்டு செக் புஸ்தகத்தை சட்டைப்பைக்குள் வைத்துக்கொண்டான்.

"இரு, இரு. வீட்டுச் செலவிற்கு பணம் இல்லை. அதற்கும் இருநூறு ரூபாய் வாங்கிக்கொண்டு வா" என்றாள்.

குணேந்திரன் ஆச்சரியத்துடன், "பின் ஐநூறு ரூபாய் எதற்காக?" என்றான்.

"அந்தப் பணமா? நான் நாளை காசிக்குப் போகப் போகிறேன்."

குணேந்திரன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். "நாளை காசிக்குப் போகிறாயா? இது விஷயமாக ஒருவரையும் கேட்கவேண்டியதில்லை என்று நினைத்தாயா?" என்றான்.

ஹேமா சாந்தமாக, "உனது அனுமதியை வாங்கிக் கொண்டு போவேன்" என்றாள்.

"நாளை போவதென்று தீர்மானம் செய்துவிட்டாய். பின் அனுமதி எப்பொழுது வாங்குவது? கூட இன்னும் யார் வருகிறார்கள்?"

"மானதாவும், தர்பானும் வருகிறார்கள். நேற்று இரவே சொல்லாமென்றிருந்தேன். போய் வரட்டுமா குணீ அண்ணா?"

"சரி போய் வா" என்று சொல்லிவிட்டு குணேந்திரன் கச்சேரிக்குப் போய்விட்டான்.

சாயங்காலம் ஹேமா பணத்தை அலமாரியில் வைத்துவிட்டு, குணேந்திரன் அருகில் வந்து, "நாளை போகப்போவதில்லை?" என்றாள்.

"ஏன் ?"

"இன்று மத்தியானம் சமையல்காரன் வீட்டிலிருந்து அவனது தாயாருக்கு உடம்புக்குச் சரியில்லை என்று தந்தி வந்திருந்தது. நான் மூன்று மாதச் சம்பளம் கொடுத்து லீவும் கொடுத்துவிட்டேன். அவன் போய்விட்டான்."

"சமையலுக்கு என்ன செய்வது?"

"வேறு ஒரு நல்ல ஆள் கிடைக்கும் வரையிலும் நானே செய்கிறேன். குணீ அண்ணு, இனி நீ கலியாணம் செய்து கொள்."

"ஏன் "

"ஏனு ? கலியாணம் செய்துகொள்ளாவிட்டால் யார் குடும்பத்தை கவனித்துக் கொள்வார்கள்? உனது சௌகரியத்தைத்தான் யார் கவனிப்பார்கள் ?"

"நீ "

ஹேமா சிரித்துக்கொண்டு, "நான் எத்தனை நாளைக்கு இந்தக் குடும்பப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டிருப்பேன்? எனக்கு இதைவிட வேறு காரியம் கிடையாதா ?" என்றாள்.

"என்னைக் கவனித்துக்கொள்வது ஒரு காரியம் அல்லவா ?"

ஹேமா சிரித்துக்கொண்டே, நான் உன்னேடு வாதாட முடியாது. இதெல்லாம் ஒருக்காலும் முடியாது. உங்கள் சமாஜத்தில் பெரிய பெண்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். ஒருத்தியைப் பார்த்துக் கலியாணம் செய்துக்கொள். நான் அவளிடம் குடும்பத்தை ஒப்புவித்துவிட்டு காசிக்குப் போகிறேன்." என்றாள்.

"சரி, நீயும் ஒரு கலியாணத்தைச் செய்துகொள். நானும் செய்துகொள்கிறேன்."

ஒரு கணத்தில் அவளுடைய சிரிப்பு எல்லாம் மாயமாக மறைந்துவிட்டது, "ராம ராம! இது என்ன கேலி குணீ அண்ணு? இனி எப்போதும் இம்மாதிரி வார்த்தைகளைப் பேசாதே" என்ருள்.

குணேந்திரன் ஒன்றுமே பேசவில்லை. அவன் திடுக்கிட்டு அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

ஹேமா எழுந்து சென்றுவிட்டாள்.

## 5

ஹேமா இரண்டுமாதங்கள் காசியில் இருந்தாள். அதன் பிறகு குணேந்திரன் நோயுற்றிருப்பதைக் கேள்விப்பட்டு மறுபடியும் கல்கத்தா வந்து சேர்ந்தாள். அவள் வராதிருந்தால் நோய் கடினமாயிருக்கும். அவள் வேண்டிய சிசுருஷை முதலியவைகள் செய்து குணேந்திரனைக் குணப்படுத்தினுள்.

மழை பலமாகப் பெய்துகொண்டிருந்தது. குணேந்திரன் கட்டிலின்மேல் உட்கார்ந்த வண்ணம் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டு ஹேமாவைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தான். ஒரு மாறுதலை அவன் கண்டான். ஹேமா முன்பெல்லாம் காலையில் எழுந்ததும் குணேந்திரனை வணங்குவதற்கு வருவாள். ஆனல், இந்தத் தடவை வரவில்லை. மான்தாவை விட்டு ஹேமாவை வரும்படி அழைத்தான். ஆனல், அவன் வந்து ஹேமா, 'ஜபம் செய்கிருள்' என்று சொன்னுள்.

ஏறைக்குறை இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு ஹேமா அறைக்குள் வந்து, "என்னைக் கூப்பிட்டாயா?" என்ருள்.

" ஆம். கொஞ்சம் உட்காரு " என்ருன் குணேந்திரன்.

"ஆனால், இன்னும் எனது ஜபம் முடியவில்லையே?" என்றாள் ஹேமா.

"இரண்டு மணி நேரமாகிக்கூட முடியவில்லையா?"

"அதற்குள் முடிந்தாவிடும்? குறைந்த பட்சம் இரண்டாயிரம் தரம் ஜபிக்க வேண்டும் என்று குரு சொல்லி இருக்கிறார்."

"குரு சொல்லியிருக்கிறாரா? குரு யார்?"

"நான் இந்தத் தடவை குரு தீக்ஷை யாரிடம் பெற்றுக்கொண்டேனோ, அவர்தான் எனது குரு. காசியில் வசிக்கும் சந்யாசி. ஆஹா! அவரைப் பார்த்த பிறகு இந்த உலகச் சுழலில் வந்து சிக்கிக்கொள்வதற்கு விருப்பம் உண்டாவதே இல்லை. இனி அவருடைய தரிசனம் எப்போது கிடைக்குமோ என்றே எண்ணிக் கொண்டிருக்கிறேன். நாளை அல்லது அதற்கடுத்த நாள் காசிக்குப் போகலாமென்றிருக்கிறேன்"

குணேந்திரன் சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு, "நாளைக்கு எப்படிப் போகமுடியும்? நான் இன்னும் பூரண குணமடையவில்லை ஹேமா. என்னை யார் கவனித்துக்கொள்வார்கள்?" என்றான்.

ஹேமா சிறிது வருத்தத்துடன், "அதெல்லாம் ஒன்றுமில்லை. இன்னும் இரண்டொரு நாளில் நீ பூரண குணமைந்து விடுவாய்" என்றாள்.

"சரி; அந்த இரண்டொரு நாள் வரையிலாவது நீ இருப்பாயல்லவா?"

"ஆம். இருப்பேன்" என்று கூறிவிட்டு ஹேமா போகத் தொடங்கினாள். உடனே குணேந்திரன் அவளைக் கூப்பிட்டு, நாளைக்குப் போனால் பிறகு எப்பொழுது திரும்பி வருவாய்?" என்றான்.

"இந்தத் தடவை சீக்கிரமாக வரமுடியாது. நீ எனக்கு மாதம் நூறு ரூபாய் அனுப்பி வரவேண்டும். அது எனக்குப் போதும்."

"பண விஷயம் இருக்கட்டும் ஹேமா. இரு நூறு ரூபாய் வேண்டுமானாலும் அனுப்புகிறேன். ஆனால், திருப்பி வரமாட்டாயா?"

"இனி எதற்காக வரவேண்டும்?"

"ஆனால், நான் இறந்த செய்தி கேட்டால் வருவாயா?"

ஹேமா மிகுந்த வருத்தத்துடன் "இம்மாதிரியெல்லாம் ஏன் பேசுகிறாய் குணீ அண்ணா?" என்றாள்.

"இதெல்லாம் யார் கண்டார்கள் ஹேமா? யாரும் எப்போழுதும் இறக்கலாமல்லவா? ஆகையால் அம் மாதிரி சந்தர்ப்பம் நேரிடுவதற்கு முன்னே சொல்லி விடுவதுதான் சரி. எனது உயிலில் உனக்குச் சேர வேண்டிய பணத்திற்கு வழி இருக்கும். இந்த வீடு உனக்கேதான். நீ எப்பவாவது இங்கு வரநேர்ந்தால் இந்த வீட்டில், இந்த அறையிலேயே படுத்துக்கொள்ள வேண்டும். இதுதான் நான் உன்னை வேண்டிக் கொள்வது."

ஹேமா என்னவோ சொல்ல விரும்பினாள். ஆனால், அதைச் சொல்லாமல், "குணீ அண்ணா, இப்படி எல்லாம் கவலைப்படாதே. இன்னும் கொஞ்சம பல வீனம் இருக்கிறது. அதனால்தான் உனக்கு இப்படிப் பேசத்தோணுகிறது."

"அப்படித்தானிருக்கும்" என்று கூறிவிட்டு குணேந்திரன் வெளியே மழை பெய்வதைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஹேமா கவலை தேங்கிய முகத் துடன் வெளியே சென்றுவிட்டாள்.

இருட்டின பிறகும் குணேந்திரன் அறையில் தீபம் இன்றி இருள் சூழ்திருப்பதைக் கண்ட ஹேமா, "நந்தா, மாடி அறையில் ஏன் விளக்கேற்றவில்லை?" என்று கேட்டாள்.

"நான்தான் வேண்டாமென்று சொல்லிவிட்டேன்" என்று கூறினுன் குணேந்திரன்.

நந்தா ஓடி வந்தான். அவனிடம் விளக்குக் கொண்டுவரும்படி சொல்லிவிட்டு ஹேமா அறைக்குள் நுழைந்து கட்டிலில் அவன் கால் அருகில் உட்கார்ந்தாள். நந்தா விளக்கைக் கொண்டு வந்து மேஜைமீது வைத்தான். ஹேமா குணேந்திரனது காலருகில் கையைக்கொண்டு போகு முன்பே அவன் காலே அப்புறம் நகர்த்திக்கொண்டான். ஹேமா வருத்தமடைந்து "உன் காலேத் தொடக்கூடாதா?" என்ருள்.

"எதற்காகத் தொட வேண்டும்? ஒரு வேளே உனது குரு தடுத்திருக்கலாம்."

ஹேமா காசியிலிருந்து வந்த பிறகு அவன் காலேப் பிடித்துவிட வில்லே. அதனுல்தான் குணேந்திரன் இப்படிப் பேசுகிருன் என்பதைத் தெரிந்துகொண்டாள். அவள் ஒன்றுமே பேசவில்லே. பேசாமல் உட்கார்ந்து கொண்டாள். சிறிது நேரத்திற்குப் பிறகு, "குணி அண்ணு, என் பேரில் உனக்குக் கோபமா?" என்ருள்.

"நான் எப்போதாவது உன்னேக் கோபித்திருக கிறேனு?"

ஹேமா உடனே "எப்போதும் இல்லே. ஆனுல், இன்று ஏன் இப்படி எல்லாம் பேசுகிருய்?" என்ருள்.

"எப்படி?"

"உயில் இன்னும் என்ன வெல்லாமோ. உனக்கு நோய் குணமாகிவிடும். பயப்படாதே."

குணேந்திரன் புன் சிரிப்புடன் "குணமடைய மாட்டேன் என்று பயப்படுகிறேன்? நீ அப்படியா நினேக்கிருய்?" என்ருன்.

ஹேமா தழதழத்த குரலில் "உன் காலில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன் அண்ணு; நீ இப்படிப் பேசாதே

நீ குணமடையாவிட்டால் நான் எப்படி வாழ்வேன்?'' என்றாள்.

"ஆனால், நீ போய்விட்டால் நான் எப்படி பிழைப்பேன்? அதற்காகவாவது உன்னைப் போகவிடேன்.''

ஹேமா சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு "என்னைத் தடுத்து வைத்திருப்பதால் உனக்கு என்ன லாபம்'' என்றாள்.

"லாபம்!'' குணேந்திரன் வேறு ஒன்றும் கூற வில்லை. சலனமற்று இருந்தான். வெளியே பெரிய பெரிய மழைத்துளிகள் ஜன்னல்மேல் விழுந்துகொண்டிருந்தன. திடீரென பலமாகக் காற்று வீசியது. அதனால் அறைக்குள் எரிந்துகொண்டிருந்த விளக்கு அணையப்போயிற்று. கீழே வேலைக்காரர்களின் அரவம் அரைகுறையாகக் கேட்டது. ஆனால், இவர்கள் இருவர் மட்டும் மௌனமாகவே உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். குணேந்திரன் சிறு வயதிலிருந்தே ரொம்ப அடக்கமான குணமுள்ளவன். அவன் மிகப் பலமாகத்தான் தன் உள்ளத்தை அடக்கி வைத்திருந்தான். ஆனால், சுலோசனாவினுடைய கடைசி ஆசி மொழிகள் அவனது அடக்கத்தை எல்லாம் உடைத்து எறிந்து விட்டது. வெளியில் பலமாகப் பெய்யும் மழையைப் பார்த்துக்கொண்டே அவன் முதலிலிருந்து கடைசி வரையிலும் எல்லா விஷயங்களையும் யோசிக்கத் தொடங்கினான். ஆனால் எந்த விஷயமும் அவனது களைப் படைந்த மூளைக்குப் புலப்படவே இல்லை.

ஹேமா திடீரென, "குணீ அண்ணா, ஏன் பேசாமலிருக்கிறாய்? என்ன யோசிக்கிறாய்?'' என்றாள்.

"ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை. அது உன்னிடம் சொல்லக்கூடியதல்ல; சொன்னாலும் உன்னால் புரிந்து கொள்ளமுடியாது. எப்போதாவது உன் புத்தி மாறி—அதுவரை நானும் உயிரோடிருந்தால்—திரும்பி வா!'' என்றான் குணீ. ஹேமா கொஞ்சம் தள்ளி உட்கார்ந்

தாள். "எனக்கு எல்லாம் தெரியும். ஐயோ பாழும் விதியே! ரக்ஷிப்பவனையே பக்ஷிப்பவனுக்குகிருயே! கடைசியில் நீயே என்னைப் படுகுழியில் தள்ளப் பார்க்கிருய்!" என்ருள்.

குணேந்திரன் இதுவரையிலும் ஒரு பெரிய தலையணையில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனுடைய கண்கள் சிவந்தன. நேராக நிமிர்ந்து உட்கார்ந்து "ச்சீ! ஹேமா தெரிந்து பேசு! நீ சொல்வதென்ன?" என்ருன்.

ஹேமா மின்னலைப் போல் எழுந்து நின்றுகொண்டாள். "தெரிந்துதான் பேசுகிறேன். நீ சுற்றி வளைத்துச் சொல்லப்போவதை நான் நேருக்கு நேர் வெளிப்படையாகச் சொல்லுகிறேன். நீ என்னைக் கெடுக்கப் பார்க்கிருய். விதவா விவாஹம் செய்யலாமா குணீ அண்ணு? தர்மத்தை அறிந்தும் அதர்ம வழியில் நடப்பதற்கு நான் அவ்வளவு பெரிய மூடமல்ல. எனக்கு உன்னுடைய பணம் வேண்டியதில்லை. உன்னுடைய பாதுகாப்பு ஒன்றுமே வேண்டியதில்லை. நான் எனது மாமனுர் வீடு சென்று வாசல் பெருக்கி வயிறு வளர்ப்பேன்; அதுவே எனக்குப் போதும். உனது ஐஸ்வரியம் எனக்கு வேண்டியதில்லை. எனக்கு அந்த துர்ப்புத்தி வேண்டாம். அன்று உனது புத்தி எங்கு போயிற்று? அன்று ஏன் நீ இவ்வாறு சொல்லவில்லை" என்ருள்.

குணேந்திரன் அப்படியே அசையாது உட்கார்ந்து கொண்டு, "ஹேமா, எனது குற்றத்தை மன்னித்து விடு; நான் நோயாளி, இதையாவது எண்ணிப் பார்" என்ருன்.

"யோசித்தேன். இன்று மன்னிக்க முடியாது. இரண்டு நாளைக்கப்புறம் மன்னிப்பேன். ஆனல் இனியும் உன்னுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்க முடியாது. நான் கர்வத்துடன் திரும்பி வந்த இடத்திற்கே நாளை போகிறேன். என்னவானுலும் அங்

கேயே விழுந்து கிடப்பேன். அதுதான் எனது காசி; சொர்க்கம் நீயும் என்னை மன்னித்துவிடு குணீ அண்ணு. நான் போகிறேன்.''

ஹேமா சென்றுவிட்டாள். குணேந்திரன் அம் மாதிரியே இடிவிழுந்த மரம்போல் அசையாது நின்று கொண்டிருந்தான். அவனுடைய தேகத்தில் படுப்பதற் குக்கூட சக்தி இல்லை போலும்.

மறுபடியும் துர்க்கா பூஜை வந்தது. ஹேமா அதி காலையில் ஜன்னலோரம் நின்றுகொண்டு கிழக்கு வானத்தின் ரத்தச் சிவப்பையே மௌனமாகப் பார்த் துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள். தெரு முழு வதும் வாத்தியங்கள் முழங்கிக்கொணடிருந்தன. அவை களிலிருந்து எழும் இசை வசந்தத்தின் தேமதுரத்தை அவள் இதயத்தில் பொழிந்தது. அவளையறியாமல் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது. எத்தனை நாட்கள் ஆகிவிட்டன! குணேந்திரனிடமிருந்து ஒரு தகவலும் கிடையாது. அவள் மனதிற்குள்ளாகவே யோசிக்கத் தொடங்கினுள். எனது குணீ அண்ணு எங் கிருக்கிருனே, எப்படி இருக்கிருனே! கல்கத்தாவை விட்டுப் புறப்படும்பொழுது குணேந்திரன் அழுது கொண்டே 'ஹேமா இன்னும் இரண்டொரு நாளைக்கு இருந்து விட்டுப்போ, கோபத்தோடு போகாதே, என்ருன். அந்தக் கர்வக்காரனின் கண்ணீர் முத்துக் களின் விலை மதிப்பை அப்போது அவள் உணர வில்லை. அன்று மிகப் பலவீனமான நிலையிலுங்கூட குணேந்திரன் கீழே தெரு வரையிலும் இறங்கி வந்து, "ஹேமா, உனது மனநிலை சரியில்லை. ஏனே கெட்டுக் கிடக்கிறது. ஆகையால் நான் சொல்வதைக கேள். திரும்பி வந்து ஒரு நாளைக்காவது இருந்துவிட்டுப் போ'' என்ருன். ஆனல் ஹேமா ஒன்றையும் கேட்க வில்லை. வண்டியில் போய் உட்கார்ந்து கொண்டாள். குணேந்திரன் கடைசியாக வண்டிக்கருகில் வந்து, "ஹேமா, இப்போது நீ செய்வது முள்போல் எப்போ தும் உனது இதயத்தில் குத்திக்கொண்டே இருக்கும்.

நான் எனக்காகச் சொல்லவில்லை ஹேமா. உனக்காகத் தான் சொல்லுகிறேன். இன்று ஒரு நாளாவது இருந்து விட்டுப் போ'' என்ருன். ஆனல் ஹேமா அதற்குப் பதிலுக்கு வண்டிக்காரனிடம் வண்டியை ஓட்டச் சொன்ஞள். இதை எல்லாம் நினைத்து நினைத்து ஹேமா மிகத் துக்கத்துடன் படுக்கையில் வந்து படுத்தாள். அவளுடைய கண்ணீரால் படுக்கையே நனைந்து விட்டது. கடைசியில் சற்றுக் கண்ணயர்ந்தாள். இவ்வளவு துக்கமடைவதற்குக் காரணமும் இருந்தது. காசி போவதற்காக வேலைக்காரியை அனுப்ப கணக்கப்பிள்ளையிடம் ஐம்பது ரூபாய் வாங்கிவரச் சொன்ஞள்; ஆனல் கணக்கப்பிள்ளை 'சின்ன எஜமானர் உத்தரவின்றி நான் பணம் கொடுக்க மாட்டேன்' என்று சொல்லி அனுப்பிவிட்டான். ஹேமா தனது சிறிய மைத்துனனிடம் பேசியது இல்லை. அவள் கதவு மறைவில் நின்றுகொண்டு, "நான் கேட்டால் கணக்கப்பிள்ளை ஐம்பது ரூபாய்கூடக் கொடுக்கக் கூடாதா ?'' என்ருள்.

"முடியாது. உங்களுக்குச் சாப்பிடுவதற்குத்தான் உரிமை உண்டு. பணம் கொடுக்க முடியாது.''

"எனது உரிமை என்னவென்பது எனக்குத் தெரியும். உங்களுடன் ரூபாய், அணு பைசாவுக்காக வழக்காட எனக்கு இஷ்டமில்லை. ஆனல், என்னை நீங்கள் திக்கற்ற அனுதையாக எண்ணிவிடாதீர்கள். கொடுப்பதானல் கொடுங்கள். இல்லாவிட்டால் அதையும் சொல்லிவிடுகிறேன். பணத்திற்குத்தான் பலமிருக்குமானல் உங்கள் வீட்டுச் சுவரை இடித்து கங்கா நதியில் கொண்டுபோய் கொட்டிவிடுவேன்.''

இதற்குச் சிறிது நேரத்திற்குப் பிறகு பணம் வந்தது. ஆனல், ஹேமா அதை வாங்கிக்கொள்ளவில்லை, கோபத்தோடு பணத்தை வாசலில் விசிறி எறிந்துவிட்டு அறையைத் தாளிட்டுப் படுத்துக் கொண்டாள்.

நாள் பூராவும் ஒன்றும் சாப்பிடவில்லை. எழுந்திருக்கக்கூட இல்லை. மனதிற்குள்ளாகவே எதையோ நினைத்துக்கொண்டு அழத் தொடங்கினுள். காலை ஏழு மணிக்குத்தான் அவள் தூக்கம் கலைந்தது. குளித்து விட்டு பூஜைக்குச் சென்று உட்கார்ந்தாள். அதற்குள் வேலைக்காரி வந்து, "அம்மா, உனது தமையனரிடமிருந்து சீர்வரிசைகள் வந்திருக்கின்றன" என்று கூறி முடிப்பதற்குள், மானதா வந்து நமஸ்கரித்தாள். மானதாவைக் கண்டதும் சகல துக்கத்தையும் மறந்து விட்டாள். அவளைக் கட்டிப் பிடித்துக்கொண்டு குழந்தையைப் போலக் கோவெனக் கதறினுள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் வெள்ளம் ஆருகப் பெருகியது. மானதாவைத் தனது அறைக்கு அழைத்துக் போய், "குணீ அண்ணு, கடிதம் எழுதிக்கொடுத்திருக்கிருனு? எங்கே கொடு!" என்ருள்.

"கடிதம் ஒன்றும் எழுதிக் கொடுக்கவில்லையே!"

ஹேமாவுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. "இல்லையா?" என்ருள்.

"இல்லை, அவரால் உட்கார எழுந்திருக்க முடிந்தால்தானே கடிதம் எழுதிக் கொடுப்பார்?"

ஹேமாவின் முகம் வெளுத்துவிட்டது. அவள் தன்னை சிரமத்துடன் சமாளித்துக்கொண்டு, "எழுந்து உட்கார முடியாதா? அவருக்கு என்ன உடம்புக்கு?" என்ருள்.

"உனக்குத் தெரியாதா?"

"தெரியாதே, நீ சொல்லு!"

"என்னத்தைச் சொல்வது" என்று சொல்லி விட்டு மானதா அழத் தொடங்கினுள். ஹேமா மிகுந்த தழதழத்த குரலில், "அப்புறம் அழலாம். விஷயத்தைச் சொல்லு" என்ருள்.

அவள் அழுதுகொண்டே, "என்னத்தைச் சொல்லட்டும்! நீ வந்துவிட்ட மறுநாளே மறுபடியும் ஜுரம் வந்துவிட்டது. அப்புறம் குணமாயிற்று. மறுபடியும் வந்தது. அப்புறம் குணமாவதும் வருவதுமாகவே இருக்கிறது. திரும்பிப் போய்ப் பார்ப்பேனே என்னவோ, அந்த நம்பிக்கைகூடக் கிடையாது" என்றாள்.

"சரி, இன்னும் என்ன விஷயம்?"

"அதை ஏன் கேட்கிறாய்? குணேத்திரன் நிலையைக் கேள்விப்பட்டு பரத்வானிலிருந்து யாரோ சித்தியாம் வந்தாள். பிறகு சித்தப்பா வந்தார். அதற்கப்புறம் சித்தியின் மகன, மகள், பேரன் பேத்தி எல்லோரும் வந்துவிட்டார். ஒருத்தரும் பாக்கி இல்லை. வீட்டில் இப்போது இடம் கூடக் கிடையாது."

"நான் எல்லோரையும் போகச் சொல்லிவிடுகிறேன். ஊம், அப்புறம்?"

"எல்லோரும் நன்றாகச் சாப்பிடுகிறார்கள். கொண்டாட்டம் போடுகிறார்கள். மேலே குணேந்திரன் படுத்துக்கொண்டிருக்கிறான். சாப்பாடில்லை, தண்ணியில்லை, வைத்தியரும் வருவதில்லை, டாக்டரும் வருவதில்லை. இடம் மாற்றினால் குணமாகுமென்று சொல்லுகிறார்கள். ஆனால் யார் இருக்கிறார்கள் கூட்டிக்கொண்டு போவதற்கு?"

"நீங்களெல்லாம் என்ன செய்கிறீர்கள். நந்தா கூட்டிக்கொண்டு போகக்கூடாதா?"

மானதா மண்டையில் அடித்துக்கொண்டு, "அவன் தானே வீட்டுக்குப் பழைய வேலைக்காரன். ஆனால், சித்தி மகன் அபயா அவனையும் அடித்து விரட்டிவிட்டான். பையன் சாராயம் குடிக்கிறான். அவன் வீட்டில் செய்யும் அட்டகாசம் சொல்லி முடியாது. அவனைக் கண்டால் குணேந்திரனுக்குக்கூடப் பயம்."

ஹேமா சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, "ஒரு விஷயம் கேட்கிறேன், உண்மையைச் சொல்லு. எனது குணீ அண்ணு பிழைத்துக்கொள்வாஞ ?" என்ருள்.

" பிழைக்காமலென்ன ? போய் வேண்டியதைச் செய், நிச்சயம் பிழைத்துக்கொள்வார். இப்படிப் பாரா முகமாயிருந்தால் எத்தனை நாளைக்கு இருக்கப் போகிருர் ?"

ஹேமா ஒரு நிமிஷம் கண்ணை மூடி உட்கார்ந்து கொண்டிருந்தாள். அதன் பிறகு எழுந்து நின்று கொண்டு. "மானதா உன்னிடம் திரும்பிப் போவ தற்குப் பணம் இருக்கிறதா ?" என்ருள்.

" இருக்கிறது. ஒன்று வேண்டுமாஞலும் குணேந் திரன் பத்துக் கொடுத்தனுப்புவாரே ! உனக்குத் தெரி யாதா ! பணம் என்னிடமே இருக்கிறது." என்று கூறிவிட்டு முந்தானையில் முடிந்து வைத்திருந்த பணத் தைக் காட்டினுள்.

" எப்பொழுது போவாய் ? நாளையா ?"

" ஆமாம், நாளைக்குத்தான் போகமுடியும். ஒருத்தி தான் பழைய வேலைக்காரி. மற்றெல்லோரும் புதியவர் கள். யாரும் நிலைப்பதில்லை. சித்தியைப் போலத்தான் அவளுடைய பிள்ளைகளும். எல்லோரையும் ஒரே அச்சில்தான் வார்த்தெடுத்திருக்கிறது. நாஞக இருக்கப் பொறுத்துக்கொண்டிருக்கிறேன். அபயன் என்னைக் கூட ஒரு நாள் அடிக்க வந்தான். செத்தால்தான் என் துக்கம் தீரும்."

ஹேமாவின் கண்களில் கோபக் கனல் ஜ்வலித்தது. " நான் போய் பேசிக்கொள்கிறேன். இன்று ஸ்டீமர் எப்பொழுது புறப்படுகிறது தெரியுமா ?" என்ருள்.

" ஒரு மணிக்கப்புறம் போகிறதாம். நான் வரும் போது விசாரித்து வந்தேன்."

“சரி வா! இதிலேயே போவோம். வண்டி கொண்டு வா.”

“நீயும் இன்று வருகிறாயா? இன்றைக்கு நாள் நன்றாக இல்லையே?”

“நல்ல நாள்—நேரம் செய்யாதே. வண்டி கொண்டுவா!”

அன்று மாலை அபயாவினுடைய தாய் அவனுக்குச் சாப்பாடு போட்டுக் கொண்டிருந்தாள். அவனை இன்னும் இரண்டு பூரி வைத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டிருந்தாள். அந்த அறைக்குள்தான் மேல் மாடிக்குப் போகும் படி இருந்தது. முன்பின் தெரியாத தாய் சித்தி, ஹேமாவை “யாரம்மா?” என்று கேட்டாள்.

“நான் ஒரு பிச்சைக்காரி” என்று கூறிவிட்டு ஹேமா நேராக மேல்மாடிக்குச் சென்றாள்.

அபயன் அவளையே ஓநாயைப்போல் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஹேமா குணேந்திரன் அறைக்கு சென்று பார்த்தாள். அவன் சுவர்ப் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு படுத்திருந்தான். விழித்துக்கொண்டிருக்கிறானோ, தூங்குகிறானோ தெரியவில்லை. தலைமாட்டில் சாவிக் கொத்து இருந்தது. ஹேமா முதலில் அதை எடுத்து முந்தானையில் முடிந்துகொண்டாள். மேஜை மீது இரண்டு மூன்று விதமான கண்ணாடிப் பாட்டில்கள் இருந்தன. அவைகளை எடுத்துப் பார்த்தாள். லேபிள் மேல் பதினைந்து நாளைக்கு முந்திய தேதி குறிக்கப்பட்டிருந்தது. அவளுக்கு எல்லா விஷயங்களும் நன்கு தெரிய வந்தது. அதற்கப்புறம் இரும்புப் பெட்டியைத் திறந்து செக் புத்தகத்தை எடுத்து பரிசீலனை செய்து கொண்டிருந்தாள். அதற்குள் சித்தி அங்கே வந்தவள் இதைக் காண பிரமித்துவிட்டாள். அவள்

மிக்க கோபத்துடன் "நீ யார் பெட்டியைத் திறப்ப தற்கு?" என்றாள்.

"சத்தம் போடாதே. தூக்கம் கெட்டுவிடும்" என்றாள் ஹேமா.

அவள் இன்னும் அதிகமாச் சத்தமிட்டு "சத்தம் போடவேண்டாமா?" என்றாள்.

குணேந்திரன் விழித்துக்கொண்டுதான் இருந் தான். அவன் திரும்பிப் படுத்தான்.

ஹேமா, "நான் திறக்காவிட்டால் வேறு யார் திறப் பது? நீயா?" என்றாள்.

குணேந்திரன் இவைகளைப் பார்த்துக்கொண் டிருந்தான். ஆனால், இவர்களிருவரில் யாரும் அவனைக் கவனிக்கவில்லை. சித்திக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. குணேந்திரன் மெதுவாக "ஹேமா, நீ எப்போது வந்தாய்?" என்றான்.

"இப்போது வந்தேன். உனது பெட்டியைத் திறந்ததற்காக வெளி ஆசாமி வந்து சத்தம் போடக் கூடாதென்று இந்த அம்மாளிடம் சொல்லு. இவைகள் எல்லாம் என்னுடையவை என்பதை நன்றாகத் தெரியும் படி சொல்லி போகச்சொல்லு."

குணேந்திரன் எல்லாவற்றையும் அறிந்துகொண் டான். அதன் பிறகு சிரித்துக்கொண்டு. "அந்த உறவில்தான் இத்தனை நாளைக்கப்புறம் பெட்டியைத் திறக்க வந்திருக்கிறாயாக்கும்?" என்றான்.

ஹேமா செக் புத்தகத்தின் பக்கங்களை எண்ணிக் கொண்டு, "ஆமாம்" என்றாள்.

"இவள் யார் குணீ?" என்று சித்தி கேட்டாள்.

"எனது தங்கை!"

இதைக்கேட்டு ஹேமா நடுங்கினாள். அதன் பிறகு அவள் தலையை உயர்த்தி குணேந்திரனுடைய முகத்தைப் பார்த்தாள். பிறகு தலைகுனிந்து கொண்டாள்.

“எப்படி? இதுவரையிலும் நான் கேள்விப்பட்டதில்லையே?” என்றாள் சித்தி.

குணேந்திரன் சந்தேகத்திற்கிடமின்றி பதில் அளித்தான். “இத்தனை நாளும் கோபத்தில் போயிருந்தாள். எல்லாம் அவளுடையதுதான் சித்தி.”

சித்தி இதை நம்பவில்லை. ஆனால் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் பேசாமல் கீழே சென்று விட்டாள். அவள் சென்ற பிறகு குணேந்திரன், ஹேமாவைப் பார்க்காமலேயே, “இறக்கும்போது திடீரென உனக்கு எப்படி ஞாபகம் வந்தது?” என்றான்.

ஆனால், இதைக் கூறிய பிறகு அவளுடைய முகத்தைப் பார்த்ததும் அவன் பயந்துவிட்டான். ஹேமாவின் முகம் வெளுத்துவிட்டது. சபிக்கப்பட்ட சிலைபோலக் காட்சியளித்தாள்.

குணேந்திரன் பயத்துடன். “ஹேமா!” என்று அழைத்தான்.

ஹேமா ஒன்றும் பேசவில்லை; ஆடவில்லை; அசையவில்லை. தரையையே உற்றுப் பார்த்தபடி உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

குணேந்திரன் துக்கத்துடன், “ஹேமா இதைக் கேளு” என்றான்.

ஹேமா பதிலுக்கு ஒரு பெருமூச்சு விட்டாள். பிறகு அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தாள். குணேந்திரன் எப்படியோ கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான் பிறகு. சிரமப்பட்டு கட்டிலை விட்டு இறங்கி ஹேமாவுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டான்.

அவன் எதிரில் வந்து நின்றதும் ஹேமா அவனது பாதத்தில் விழுந்து கோவென அழ ஆரம்பித்தாள்.

"ஒரு குற்றமும் இன்றி எல்லோரும் எனக்குத் தண்டனை அளித்தார்கள். ஆனல், நீயும்கூட இப்படிச் செய்வாய் என்று கனவில்கூட நினைக்கவில்லை" என்ருள்.

குணேந்திரன் ஒன்றும் பேசவில்லை. கருமேகத்தைப் போன்ற அவளது கூந்தல் அவனுடைய பாதத்தை முத்தமிட்டுக்கொண்டிருந்தது. அவைகளேயே பார்த்தபடி அவன் நின்றுகொண்டிருந்தான். அதன் பிறகு மெதுவாக உட்கார்ந்து தனது வலது கையை அவளது சிரசின்மேல் வைத்துக்கொண்டு, "உன்னை ஏன் தண்டிக்கிறேன் ஹேமா! என்னை நீ நேசிக்கிருய். அதனல் என்னைக்கூட தண்டித்துக் கொள்ள முடியவில்லை. இது தண்டனை அல்ல அம்மா. நான்கு வருஷத்திய மகத்தான துக்கத்திற்குப் பிறகு, மரணத்திற்கு முன் எனக்குச் சாந்திகிடைத்திருக்கிறது. கடைசி நேரத்தில் நான் அடைந்த கிடைத்தற்கரிய வஸ்துவை உனக்கு அளிக்கப் போகிறேன். வா, நாம் இருவரும் காசி போவோம்" என்ருன்.

ஹேமா முகத்தை மறைத்துக்கொண்டு அழுதபடியே, "வா; ஆனல், இதுவா உனது ஆசை? இதை நான் சகிக்கமுடியுமா?" என்ருள்.

"அவசியம் சகித்துக்கொள்வாய். காதல் தெய்வம் உன் போன்றவர்களிடம் வந்து கையேந்தி நிற்கிறதே ஒழிய, கீழ்தரமான உணர்ச்சி வசப்படுவதில்லை என்பதை அறியும்போது எல்லாம் சகித்துக்கொள்வாய். முற்றுப் பெருத உணர்ச்சிதான் காதலின் ஜீவன்; இதனல்தான் அது அமரத்துவம் அடைந்து எத்தனையோ காவியங்களேயும், எத்தனேயோ சௌந்தர்யங்களேயும், எத்தனேயோ விலை மதிக்கமுடியாத கண்ணீர் முத்துக்களேயும் சேகரித்து வைத்திருக்கிறது என்பதைத் தெரியும் போது எல்லாவற்றையும் நீ

சகித்துக்கொள்வாய், ஏன், ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முந்திய ராதையின் விரகதாபம் வைஷ்ணவர்களுக்கு உயிரா யிருக்கிறது? அந்த அன்பிலே, வேதனையிலே, ஏன் இனிமை இருக்கிறது என்பதைச் சந்தேகத்திற்கிடமின்றித் தெரிந்து கொள்ளும்போது நீ சகலத்தையும் சகித்துக்கொள்வாய் ஹேம! எழுந்து உட்கார். வா, இன்றே நாம் காசி போவோம். இன்னும் எஞ்சியுள்ள கொஞ்ச நாட்களையும் உனது ஆண்டவன் கிருபை உன்னை சன்மார்க்கத்தில் சாந்தியுடன் வைத்திருக்கும்'' என்றான்.

# மஹேஷ்

கிராமத்தின் பெயர் காஷிபூர். சிறிய கிராமம்; ஜமீந்தார் அதைவிடச் சிறியவர். இருந்தாலும் குடிகள் ஒருவரும் பலமாக மூச்சுவிடக்கூடாது. அவருடைய பிரதாபம் அப்படி.

பூஜையை முடித்துக்கொண்டு தர்க்க ரத்ன மஹாஷயர் மத்தியானம் வீடு திரும்பிக்கொண்டிருந்தார். வைகாசி முடியப்போகிறது. ஆனாலும், ஆகாயத்தில் எங்கும் மேகத்தின் நிழல்கூடக் கிடையாது. காய்ந்த ஆகாயத்திலிருந்து நெருப்புப் பொழிவதுபோலிருந்தது.

எதிரில் பரந்து கிடந்த மைதானம் கடும் வெயிலினால் வெடிக்கத் தொடங்கியது. அந்த லட்சக்கணக்கான பிளவுகளிலிருந்து பூமாதேவியின் இருதய ரத்தம் புகை போலக் கிளம்பிக்கொண்டிருந்தது. கொளுந்துவிட்டு வீசும் அதன் மேல் பரப்பைப் பார்த்தால் தலைசுழலும்—போதை கொண்டதைப்போல.

அந்த மைதானத்தின் ஓரத்தில் பாதையின்மேல் தான் நெசவுக்கார கபூரின் வீடு இருந்தது. அந்த

வீட்டின் மண்சுவர் விழுந்து, வீடு வாசலாகியிருந்தது. அந்தப்புரத்தின் நாணத்தையும் கௌரவத்தையும் தெருவில் போகிறவர்களின் கருணைக்குப் பாத்திரமாக்கி விட்டு, வீடு கவலையற்று இருப்பதைப்போல் இருந்தது. பாதை ஓரத்தில் ஒரு மர நிழலில் நின்றுகொண்டு தர்க்கரத்னமஹாஷயர். "அடே. ஓ! கபூர், வீட்டில் இருக்கிருனு என்ன?" என்று கூப்பிட்டார்.

அவனுடைய பத்து வயதுப் பெண் கதவருகில் வந்து, "ஏன்? பாபுக்கு காய்ச்சல் வந்திருக்கிறது?" என்ருள்.

"காய்சலா! கூப்பிடு அந்தப் போக்கிரியை. திருடன்! மிலேச்ச னெங்கே?"

சப்தத்தைக் கேட்டு கபூர்மியா வீட்டுக்குள்ளிருந்து ஜுரத்தில் நடுங்கிக்கொண்டு வெளியில் வந்து நின்ருன். இடிந்த சுவரில் சேர்ந்தார்போல் ஒரு பழைய கருவேலா மரம் இருந்தது. அதன் கிளையிலே ஒரு எருது கட்டப்பட்டுருந்தது. தர்க்கரத்னம் அதைச் சுட்டிக் காண்பித்துக்கொண்டு, "இது என்னுகிறது, சொல்லேன், கேட்கிறேன்? இது ஹிந்துக் கிராமம், ஜமீந்தார் பிராமணன்; உனக்குத் துளியாவது பயம் இருக்கிறதா?" என்ருர்.

அவருடைய முகம் கோபத்தாலும் வெயிலாலும் சிவந்திருந்தது. அந்த முகத்திலிருந்து கடுமையான சொற்கள் தான் வெளிக்கிளப்பும்—ஆனுல், காரணம் தெரியாததால் கபூர் அவருடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தர்க்கரத்னம், "காலையில் போகும்போது பார்த்துப் போனேன், கட்டி இருந்தது. மத்தியானம் திரும்போது அப்படியே கட்டியிருக்கிறதைப் பார்க்கிறேன். கோஹத்தியாச்சே! எஜமானர் உன்னைக் குழிதோண்டிப் புதைத்துவிடுவார். அவர் சாமான்யப்பட்ட பிராமணர் அல்ல" என்ருர்.

"என்ன செய்யட்டும் பண்டிட்ஜி மகராஜ் ? பெரிய கஷ்டத்திலிருக்கிறேன். பல நாளாகக் காய்ச்சல். தலைக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு சிறிது புல் கொண்டு வருவேன். மயக்கம்போட்டு விழுந்து விடுகிறேன்."

"ஆனால், அவிழ்த்து விடு; தானே மேய்ந்து வரட்டும்."

"எங்கு விடட்டும் பண்டிட்ஜி? இன்னும் நெல் தாம்பு ஆகவில்லை—களத்திலேயே கிடக்கின்றது. வைக்கோலும் அப்படியப்படியே எங்கு பார்த்தாலும் கிடக்கிறது. காய்ந்து கருகிக் கிடக்கிறது பெயருக்குக்கூட ஒரு பூண்டு கிடையாது. யாருடைய நெல்லிலாவது வாய் வைத்து, யாருடைய வைக்கோலையாவது சின்ன பின்னப் படுத்திவிட்டால், அது நல்லா இருக்காது. விடு என்றால் எப்படி விடுவேன் மகராஜ்?"

தர்க்கரத்னம், சிறிது தணிவடைந்து "விடா விட்டால் எங்காவது நிழலில் கட்டி இரண்டு கழி தட்டுப்போடு. அதுவரையிலும் கடிக்கட்டும். உன் பெண் சோறு ஆக்குவதில்லையா? கழுநீர் வையேன் குடிக்கட்டும்" என்றார்.

கபூர் ஒரு பதிலும் அளிக்கவில்லை. வழியற்றவன் போல தர்க்கரத்னத்தின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடைய வாயிலிருந்து ஒரு நீண்ட மூச்சு வெளிக் கிளம்பியது.

தர்க்கரத்னம், "அதுகூட இல்லையா? வைக்கோலை எல்லாம் என்ன செய்தாய்? பங்கு கிடைத்ததை விற்று வயிற்றில் கொட்டிக்கொண்டாய்! எருதுக்குக்கூட கொஞ்சம் வைக்கவில்லை! கொலைகாரனுக்கென்ன!" என்றார்.

இந்த நிஷ்டூரமான குற்றச்சாட்டினால் கபூர் வாய் மூடிக்கொண்டான். க்ஷண நேரத்திற்குப் பிறகு அவன் மெதுவாக, "பங்கிற்குக் கிடைத்ததை எஜமானர் முன்

பாக்கிக்காக வைத்துக்கொண்டார்கள்.'' பிறகு விக்கி விக்கி அழுதுகொண்டு, "பாபு சாஹேப், நீங்கள் எஜமானர். உங்கள் ஊரைவிட்டு ஓடவேண்டியதா யிருக்கும். எனக்குக் கொஞ்சம் வைக்கோல் கொடுங்கள். கூரை ஒழுகுகிறது. ஒரே ஒரு சின்ன வீடு; அப்பனும் மகளும் வசிக்கவேண்டும். அதைக்கூட இந்த வருஷம் பனை ஓலையைப் போட்டுச் சரி செய்து கொள்கிறேன். ஆனால், எனது மஹேஷ் பசியால் இறந்துவிடுமே?'' என்றான்.

தர்க்கரத்னம் சிரித்துக்கொண்டு "ஓஹோ! நீ இதற்கு ஷோக்கா மஹேஷ் என்று கூட பெயர் வைத்து விட்டாயா? சிரிப்பு வருகிறது!'' என்றார்.

ஆனால், இந்தக் கேலிப் பேச்சு கபூரின் காதில் நுழையவில்லை. அவன், ஆனால் எஜமானருக்குத் தயவு உண்டாகவில்லை. இரண்டு மாதத்திற்குச் சாப் பாட்டிற்குப் போதிய அளவு நெல் எங்களுக்குக் கொடுத்தார். ஆனால், வைக்கோலை எல்லாம் கணக்குக் காக எடுத்துக்கொண்டார். இந்த அப்பாவிகளுக்கு ஒரு வைக்கோல்கூடக் கிடக்கவில்லை—'' என்று சொல்லச் சொல்ல அவனுக்கு அழுகை வந்தது. ஆனாலும் தர்க்கரத்னத்திற்கு அவன் பேரில் துளிகூட கருணை பிறக்கவில்லை. "நீ நல்ல ஆளாய் இருக் கிறாயே, முதலிலே வாங்கினதைக் கொடுக்கவேண்டாம்? ஜமீந்தார் என்ன உனக்கு வீட்டிலே சாப்பாடு போடு வாரா? அடே நீங்களெல்லாம்தான் ராமராஜ்யத்தில் வசிக்கிறீர்களே—என்ன இருந்தாலும் ஜாதி நீச ஜாதி தானே, அதனாலே குறைகூறித் திரிகிறாய்!'' என்றார்.

கபூர் வெட்கத்துடன், "குறை ஏன் கூறுகிறோம் மகராஜ்! அவரைக் குறை கூறுவதில்லை. ஆனால், எங்கிருந்து கொடுப்பேன் சொல்லுங்கள்? நாலு ஏக்கர் நிலத்தை உழுகிறேன். ஆனால், தொடர்ந்தாற்போல் இரண்டு வருஷம் பஞ்சம் வந்துவிட்டது. வயல் நெல் வயலிலேயே காய்ந்துவிட்டது. அப்பன், மகள் இரு வருக்கும் வயிறார உணவே கிடைப்பதில்லை. வீட்டைப்

பாருங்கள். மழை வந்ததானல் மகளோடு ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு இரவைக் கழிக்க வேண்டியிருக்கிறது. கால் நீட்டித் தூங்குவதற்குக்கூட இடமில்லை. மஹேஸைப் பாருங்கள், எலும்பு தெரிகிறது. கொஞ்சம் வைக்கோல் கடனாகக் கொடுங்கள். இரண்டு மூன்று நாளைக்கு இதற்கு வயிறு நிறையப் போடுகிறேன்—'' என்றான். பேசப் பேசக் களைப்பினல் அவன் பிராமணரின் காலடியில் உட்கார்ந்து கொண்டான்.

தர்க்கரத்ன மகாஷயர் அம்புபோல இரண்டடி பின் நகர்ந்து, "அடே மடையா, தொட்டு விட்டாயா என்ன?'' என்றார்.

"இல்லை, மகராஜ்! ஏன் தொடுகிறேன், தொடவில்லை. இந்த வருஷம் கொடுங்கள் மகராஜ்; கொஞ்சம் வைக்கோல் கொடுங்கள். உங்களிடம் நான்கு போர் இருக்கிறது. அன்றைக்கு நான் பார்த்து வந்தேன். கொஞ்சம் கொடுப்பதால் ஒன்றும் குறைந்துவிடாது. ரொம்ப சாதுவான பிராணி. என்னிடத்தில் பேச முடிவதில்லை. சும்மா உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறது. கண்களிலிருந்து நீர் வடிக்கிறது'' என்றான்.

தர்க்கரத்னம் "கடன் வாங்கிக்கொள்கிறாய். ஆனல், அதை எப்படிக் கொடுப்பாய்! அதைச் சொல்லு'' என்றார்.

கபூர் மிக ஆவலுடன் "எப்படியாவது கொடுத்து விடுவேன் மகராஜ். உங்களை மோசம் செய்யமாட்டேன்'' என்றான்.

தர்க்கரத்ன மஹாஷயர் வாயில் ஒருவிதமான சப்தம் செய்துகொண்டு கபூரின் வியாகூலமான தொனியில் இழுத்தாற்போல, "மோசம் செய்யமாட்டேன்! எப்படியாவது தீர்த்துவிடுகிறேன்! ரசவாதம் செய்கிறான். தள்ளு, தள்ளு, வழியை விடு! வீட்டிற்குப் போகவேண்டும்; ரொம்ப நேரமாகிவிட்டது'' என்றார்.

இவ்வளவையும் சொல்லிவிட்டு புன்சிரிப்புடன் அடி எடுத்து வைத்தவர் திடீரென பயத்தால் பின் நகர்ந்து கோபத்துடன், "அடே மடையா, கொம்பை ஆட்டிக்கொண்டு முட்ட வருகிறதே, பாய்ச்சலா என்ன?" என்றார்.

கபூர் எழுந்து நின்றுகொண்டான். பண்டிட்ஜி கையில் பழவகையருக்களும் நனைந்த அரிசிக் கூடையும் இருந்தது. அதைக் காட்டிக்கொண்டு கபூர், "அது மோப்பம் பிடித்திருக்கிறது. ஆகையால் கொஞ்சம் தின்னக் கேட்கிறது—" என்றான்.

"தின்னவா கேட்கிறது? சரிதான். கிராமத்துக் குடியானவனைப் போலத்தான் எருதும் இருக்கிறது. வைக்கோலுக்கே விதியில்லை. வாழைப் பழமும் அரிசியும் சாப்பிடுவதற்கு வேண்டுமாம். வழியிலிருந்து தள்ளிக் கட்டு. கொம்பு எப்படி இருக்கிறது பார்! எப்பவாவது யாரையாவது உயிரை வாங்கிவிடப் போகிறது!" என்று சொல்லிக்கொண்டே பண்டிட்ஜி ஒரு பக்கமாகத் தப்பித்துக் கொண்டு கிளம்பிவிட்டார்.

கபூர் அவரைவிட்டுக் கொஞ்ச நேரம் வரையிலும் மஹேஷையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அதனுடைய ஆழ்ந்த கடுமையான கண்களில் துக்கமும் பசியும் நிறைந்திருந்தது. "உனக்கு ஒரு பிடிகூடக் கொடுக்கவில்லை? அவர்களிடம் நிறைய இருக்கிறது. இருந்தால்கூட யாருக்கும் கொடுப்பதில்லை. கொடுக்க மாட்டார்கள்"-என்று சொல்லச் சொல்ல அவனுக்கு அழுகை வந்தது.

கண்களிலிருந்து மளமளவென நீர் வடியத் தொடங்கியது. மஹேஷ் அருகில் வந்து மௌனமாக அதனுடைய கழுத்தையும், நெற்றியையும், முதுகையும் நீவிக்கொடுத்தான். மஹேஷ் நீ எனது மகன்; நீ எங்களை எட்டு வருஷம் வரையிலும் காப்பாற்றினாய். இப்பொழுது வயதடைந்துவிட்டாய். உனக்கு நான் வயிறு நிறைய உண்ணக் கொடுக்கவில்லையே! ஆனு

லும் உன்னிடத்தில் நான் எவ்வளவு பிரியமாயிருக்கிறேன் என்பது உனக்கே தெரியும்'' என்று மெதுவாகச் சொன்னான்.

மஹேஷ் அதற்குப் பதிலாக கழுத்தை நீட்டி மெதுவாகக் கண்ணை மூடிக்கொண்டது. கபூர் தனது கண்ணீரை மஹேஷின் முதுகில் துடைத்துவிட்டு அவ்விதமே கலங்கிய குரலில், "ஜமீந்தார் உனது ஒரு வாய் தீவனத்தையும் பிடுங்கிக்கொண்டார். சுடுகாட்டருகில் இருந்த மேய்ச்சல் தரையையும் பணத்தாசையால் குத்தகைக்கு எடுத்துக்கொண்டார். இம்மாதிரிப் பஞ்ச காலத்தில் உன்னை எப்படிப் பிழைக்க வைத்திருப்பேன் சொல்லு? அவிழ்த்து விட்டால் நீ மற்றவர்களின் போரில் வாயை வைப்பாய். மற்றவர்களின் வாழை மரத்தை முறித்துத் தின்பாய். உனக்காக நான் இப்பொழுது என்ன செய்வேன்? உடலில் இப்பொழுது உனக்குச் சக்திகூடக் கிடையாது. கிராமத்திலே ஒருவரும் இப்போது உன்னை விரும்புவதில்லை. உன்னை இப்பொழுது விற்றுவிட வேண்டுமென்று சொல்கிறார்கள்'' என்று மனதிற்குள்ளாக இந்த வார்த்தையை உச்சரித்ததும் அவனுடைய கண்களில் நீர் நிறைந்து பலபல வென உதிர்ந்தது. அவைகளைக் கையினால் துடைத்துக்கொண்டு அங்குமிங்கும் பார்த்தான். பிறகு பிரிந்த வீட்டுக் கூரையிலிருந்து சிறிது பழைய வைக்கோலை பிடுங்கிக்கொண்டு வந்து மஹேஷுக்குப் போட்டு விட்டு மெதுவாக, "இந்தா, ஜல்தியா எல்லாவற்றையும் தின்று விடு, நேரமாச்சுதானால் அப்புறம்-''

"பாபு?''

"ஏம்மா?''

"வா, சாப்பிடு வா'' என்று சொல்லிக்கொண்டு அமீனா வீட்டுக்குள்ளிருந்து வெளியே கதவருகில் வந்து நின்றுகொண்டாள். க்ஷண நேரத்திற்குப் பிறகு அவள் "மஹேஷுக்கு மறுபடியும் கூரை வைக்கோலை பிடுங்கிப் போட்டுவிட்டாயா பாபு?'' என்றாள்.

இந்தப் பயம் அவனுக்கு இருந்தது. வெட்கத்துடன் "சரிந்து விழுந்த வைக்கோல். தானே சரிந்து விழுந்து கொண்டிருந்தது" என்றான்.

"நான் வீட்டுக்குள்ளிருந்தே கேட்டுக்கொண்டிருந்தேன் பாபு; நீ இழுத்துக்கொண்டிருக்கவில்லை?"

"இல்லை அம்மா பிடித்திழுக்கவில்லை–"

"சுவர் விழுந்து விடும் பாபு–"

கபூர் பேசாமல் இருந்துகொண்டான். ஒரே ஒரு அறையைத் தவிர எல்லாம் இடிந்து போயிருந்தன. மேலும் இவ்விதம் செய்தால் அடுத்த மழைக்கு அதுகூட இடிந்துவிடும். இது அவனுக்கு நன்கு தெரியும். ஆனால் இவ்விதம் இன்னும் எத்தனை நாள் கழிக்க முடியும்!

பெண், "கையைக் கழுவிக்கொண்டு சாப்பிட வா பாபு, நான் எல்லாம் பரிமாறிவிட்டேன்." என்றாள்.

கபூர், "கஞ்சி கொடுத்துவிட்டுப் போ, மஹேஷுக்கு காட்டிவிட்டு ஆறுதலாக சாப்பிட உட்காருகிறேன்" என்றான்.

"இன்றைக்கு கஞ்சி வடிக்கவில்லை பாபு, பானையோடயே விட்டு விட்டேன்."

"இல்லையா?" கபூர் பேசாமலிருந்து கொண்டான். இம்மாதிரி கஷ்ட காலங்களில் துளிக்கூட எதுவும் சேதமடையவிடக் கூடாதென பத்து வருஷமாக பெண் அறிந்திருக்கிறாள். காலைக் கழுவிக்கொண்டு அவன் அறைக்குள் வந்து நின்றுகொண்டான். ஒரு பித்தளைத் தட்டிலே தந்தைக்கு பருப்புச் சோறு பரிமாறிவிட்டு மகள் தனக்கு ஒரு மண் தட்டில் போட்டுக்கொண்டு உட்கார்ந்தாள். கபூர் மெதுவாக, "அமீனா, எனக்கு மறுபடியும் இன்னும் குளிர் எடுக்கும் போலிருக்கிறது; காய்ச்சலிலே சாப்பிடுவது நல்லதா? என்றான்.

அமீனு விசனமடைந்த முகத்துடன், "ஆனல் ரொம்ப பசிக்கிறதென்று அப்போ சொன்னுயே?" என்று கேட்டாள்,

"அப்பவா? அப்போ காய்ச்சல் இருந்திருக்காது"

"ஆனல், எடுத்து வைத்துவிடுகிறேன்; ராத்திரிக்குச் சாப்பிடுவாயா?"

கபூர் தலையை ஆட்டிக்கொண்டு, "ஆறின உணவு சாப்பிட்டால் இன்னம் உடம்பு கெட்டுப்போய்விடும் அமீனு!" என்ருன்.

"ஆனல் பின்னே?"

கபூர் என்ன நினைத்துக்கொண்டு இந்தக் கஷ்டமான ஏற்பாட்டிற்கு வந்தானே! "ஒரு காரியம் செய்கிருயா. இல்லாட்டி மஹேஈக்கு வைத்துவிடு! ராத்திரிக்கு எனக்கு அப்புறம் ஒரு பிடி ஆக்கிக்கொள்ள முடியாதா அமீனு?" என்ருன்.

பதிலுக்கு அமீனு தலையை உயர்த்தி கண நேரம் மௌனமாக தந்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு தலையைக் குனிந்து கொண்டு மெதுவாக "ஊம் அப்படியே செய்கிறேன் பாபு" என்ருள்.

கபூரின் முகம் சிவந்தது. பிதா, புத்திரி, இவர்களுக்குள் நடந்த இந்தச் சிறிய கபட நாடகத்தை இந்த இரண்டு பேர்களைத் தவிர வேறு இன்னெருவரும் அந்தரத்திலிருந்து கொண்டு பார்த்திருக்கலாம்.

## 2

ஆறு ஏழு நாளைக்கப்புறம்; ஒரு நாள் நோயாளியான கபூர் கவலையடைந்த முகத்துடன் தனது திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனு

டைய மஹேஷ் நேற்றையிலிருந்து இன்னும் வீட்டிற்குத் திரும்பி வரவில்லை. அவனே ரொம்பப் பலஹீனமாக இருக்கிறான். ஆகையால் அமீனா அதைக் காலையிலிருந்து நாலா பக்கத்திலும் தேடிக்கொண்டிருக்கிறாள். பொழுது மறைவதற்கு முன் அவள் திரும்பி வந்து "கேட்டாயா பாபு, மாணிக் பாபு நம்ப மஹேஷை போலிசுக்கு அனுப்பித்திருக்கிறானும்" என்றாள்.

"போ பைத்தியம்!"

"ஆம் பாபு நிஜமா. 'உங்க அப்பனிடம் போய்ச் சொல்லிவிடு. தரியாபுரத்து தொண்டுப் பட்டியில் போய்த் தேடு' என்று அவருடைய வேலைக்காரன் என்னிடம் சொன்னான்."

"அது என்ன செய்ததாம்?"

"அவர்களுடைய தோட்டத்தில் புகுந்து செடி கொடிகளை எல்லாம் அழித்திருக்கிறதாம்."

கபூர் அசையாது உட்கார்ந்து கொண்டிருந்தான். மஹேஷ் சம்மந்தமாக அவன் அநேக விதமான துர்ச்சம்பவங்களை கற்பனை செய்துகொண்டிருந்தான். ஆனல், இம்மாதிரி சந்தேகம் அவனுக்கு உதிக்கவேயில்லை. அவன் சாதுத் தனத்தைப் போலவே ஏழ்மையிலும் மிகுந்திருந்தான். அண்டை அயலிலுள்ளவர்கள் யாரும் இவனுக்கு இவ்வளவு பெரிய தண்டனை கொடுக்கக் கூடும் என்ற பயமே இல்லாமலிருந்தான். முக்கியமாக மாணிக்க கோஷ் மூலமாகத்தான் அவன் மாட்டிற்குச் சோறு ஊட்டுவது. பிராமணர்களிடத்தில் அவனுக்கு இருக்கும் பக்தி முதலியவைகள் அந்திய கிராமங்கள் வரையிலும் பிரசித்தமாயிருந்தது. அவன் இம்மாதிரி எதிர்பார்க்கவேயில்லை.

"பொழுது போகிறது பாபு, மஹேஷைக் கொண்டு வரப் போகவில்லையா?"

"போகவில்லை"

"மூன்று நாளைக்குள் மீட்காவிட்டால் போலீஸ் காரர்கள் அதை விற்றுவிடுவார்களாம், என்று அவன் சொன்னான்."

"விற்று விட்டுப் போகட்டும்" என்று கபூர் சொன்னான்.

மஹேஷ் விஷயமாக அவள் ஏதாவது பிரஸ்தாபித்தால் அவளுடைய தந்தை எங்ஙனம் பரபரப்படைவான் என்பதை அவள் அநேகம் தடவை பார்த்திருக்கிறாள். ஆனால் இன்றோ வேறு ஒன்றும் சொல்லாமல் மெள்ளச் சென்றுவிட்டாள்.

இரவின் இருளில் ஒளிந்துகொண்டு கபூர் வம்ஷீ கடைக்குச் சென்று "சித்தப்பா, இன்று ஒரு ரூபாய் கொடுக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டு அவன் தனது பிள்ளைத் தட்டை வம்ஷீ உட்காரும் ஆசனத்திற்குக் கீழே வைத்தான். இந்தப் பொருளின் எடை வகையறுக்களை வம்ஷீ அறிந்திருந்தான். கடந்த இரண்டு வருடங்களில் அவன் இதை ஐந்தாறு தடவை அடகாக வைத்துக்கொண்டு ஒவ்வொரு ரூபாய் கொடுத்திருக்கிறான். ஆகையால் அவன் இன்று ஒரு எடையும் செய்யவில்லை.

அடுத்த நாள் மறுபடியும் மஹேஷ் தனது இடத்தில் கட்டப்பட்டிருந்தது. அதே கருவேலாமரம், அதே கயிறு, அதே முளை, அதே மாட்டுத் தாழி, அதே பசி நிறைந்த கரும்கண்களின் விலாசமான ஆவல்நிறைந்த திருஷ்டி. ஒரு வயோதிக முசல்மான் அதைக் கூர்மையாக உற்றுநோக்கிக் கொண்டிருந்தான். அருகில் ஒரு ஓரத்தில் கபூர் குந்தவைத்து உட்கார்ந்து கொண்டிருந்தான். நன்றாகப் பார்த்துவிட்டு அந்தக் கிழவன் மேல் வேஷ்டியிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து அதை மூடிக்கொண்டு அடிக்கடி அதை சரி செய்து கொண்டு கபூர் அருகில் சென்று, "இப்போது விலை பேசி இதை முறிக்கவில்லை, இதோ பார், சரியாகப் பத்து ரூபாய் கொடுக்கிறேன்—வாங்கிக் கொள்" என்றான்.

கபூர் கையை நீட்டி நோட்டை வாங்கிக்கொண்டான். மேலும் அம்மாதிரியே மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தான். கிழவனோடு வந்திருந்த இரு ஆட்களும் அதனுடைய தலைக்கயிற்றைத் தொட்டதும் கபூர் திடீரென எழுந்து கோபத்தோடு நின்று கொண்டான். மேலும் கடுமையான குரலில், "தலைக்கயிற்றைத் தொடாதே, சொல்லிவிடுகிறேன்—ஜாக்கிரதை, நன்றாயிருக்காது!" என்றான்.

அவர்கள் திடுக்கிட்டார்கள். கிழவன் ஆச்சரியத்துடன், "ஏன்?" என்றான்.

கபூர் அவ்விதம் கோபத்தோடு, "என்ன ஏன்! என் பொருள் நான் விற்பதில்லை—என் இஷ்டம்!" என்று சொல்லிவிட்டு அவன் நோட்டை விசிறி எறிந்தான்.

"நேற்று வழியில் அச்சாரம் வாங்கி வந்தாயே?" என்றார்கள்.

"இந்தா உங்களது அச்சாரத்தை வாங்கிக்கொள்ளுங்கள்!" என்று கூறிவிட்டு மடியிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்து சல்லென எறிந்தான். ஒரு சண்டை எழலாம். இந்த எண்ணத்துடன் கிழவன் சிரித்துக் கொண்டு, "தீரத்துடன் அடம் செய்து இன்னும் இரண்டு ரூபாய் அதிகமாக வாங்க விரும்புகிறாய், இது தானே? கொடுத்துவிடுங்க, நாஷ்டாவிற்காக அவனது பெண் கையில் கொடுத்துடுங்கள். இரண்டு ரூபாய் போதும், இதுதானே?"

"முடியாது."

"ஆனால் இதை விட அதிகமாக ஒரு சல்லிகூடக் கொடுக்கமாட்டேன், தெரியுமா?"

கபூர் பலமாக தலையை ஆட்டிக் கொண்டு "முடியாது" என்றான்.

கிழவன் கோபமடைந்து, "ஆனல் என்ன? தோலுக்குத்தானே விலை கிடைக்கும்? இல்லாவிட்டால் சரக்கு இதில் என்ன இருக்கிறது?" என்ருன்.

"தப்பு! தப்பு!" கபூர் முணுமுணுத்தான்.

கிழவன் சிரித்துக் கொண்டு, "சரி இன்னும் இரண்டு ரூபாய் அதிகமாக வேண்டுமென்கிருய். இது தானே உன் ஆசை. கொடுத்து விடுங்கள். அவன் பெண்ணின் கையில் கொடுத்து விடுங்கள்" என்ருன்.

"வேண்டாம்."

"இதற்கு மேல் இனி ஒரு தம்பிடிக்கூடக் கொடுக்க முடியாது."

கபூர் பலமாகத் தலையை அசைத்துக் கொண்டு, 'முடியவே முடியாது.' என்ருன்.

கிழவன் கோபமடைந்துவிட்டான். "அடே! இதி லென்னப்பா இருக்கிறது? வெறும் எலும்பும் தோலுந் தானே?" என்ருன்.

"போய்த் தொலையுங்கள்! இல்லாவிட்டால் ஜமீந் தார் ஆட்களை கூப்பிட்டு செருப்பாலடிக்கச் சொல்லி கிராமரத்தை விட்டு விரட்டச் சொல்லுவேன்" என்று சத்தமிட்டான்.

சத்தத்தைக் கேட்டு அருகிலுள்ளவர்கள் ஓடி வந் தார்கள். இதற்குள் ஜமீந்தாரிடமிருந்து அவனைக் கூட்டிப் போவதற்கு ஒரு ஆள் வந்தான். விஷயம் ஜமீந்தார் வரையிலும் எட்டியிருந்தது.

ஜமீந்தார் கச்சேரியில் பலபேர் கூடியிருந்தார்கள். சிவசங்கரபாபு கண்ணை உருட்டி விழித்துக் கொண்டு "கபூர் உனக்கு என்ன தண்டனை கொடுப்பதென்று தெரியவில்லையே! யாருடைய ஆளுகையில் வசிக்கிருய் தெரியுமா?" என்ருர்.

கபூர் கும்பிட்டுக்கொண்டு, "தெரியும் மகராஜ்! வயிற்றுக்கின்றி கஷ்டப்படுகிறோம் மகராஜ். இல்லா விட்டால் தாங்கள் என்ன தண்டனை கொடுத்தாலும் தடையின்றி ஏற்றுக் கொள்வோமே!" என்றான்.

அங்கிருந்தவர்களெல்லோரும் ஆச்சரியத்தால் திடுக்கிட்டார்கள். கபூரை பிடிவாதக்காரன், போக்கிரி என்றுதான் அவர்கள் எண்ணி வந்தார்கள்.

கபூர் மிகுந்த துக்கத்துடன், "இம்மாதிரி காரியம் இனி எப்போதும் செய்யமாட்டேன், மாராஜ்"

இதைக் கூறிவிட்டு அவன் இரு காதுகளையும் பொததிக் கொண்டான். பிறகு அங்கிருந்தவர்களை எல்லாம் ஒரு முறை பார்த்தான்.

சிவசங்கர், "சரி போ. நடந்தது நடந்துவிட்டது; இனி இம்மாதிரி துர்ப்புத்தி வேண்டாம்" என்றார்.

இதைக் கேட்டு அங்கிருந்தவர்களுக்கெல்லாம் ரோமம் சிலிர்த்தது. இந்த மாபாதகம் நடைபெறுமல் தடைபட்டது ஜமீந்தாரின் புண்ய பலத்தினுல் என்பதில் அங்கிருந்தவர்கள் யாருக்கும் துளியாவது சந்தேகம் கிடையாது. தர்க்கரத்ன மஹாஷயரும் அங்கிருந்தார். அவர் பசு என்பதற்குச் சாஸ்திர ரீதியாகப் பொருள் உரைத்துவிட்டு, இம்மாதிரி மிலேச்ச ஜாதியைச் சேர்ந்தவனை கிராமத்தில் ஏன் வசிக்க விடவேண்டும் என்று கேட்டு அங்கிருந்தவர்களின் அறிவுச் சுடரைத் தூண்டி விட்டார்.

கபூர் எதற்கும் பதில் கூறவில்லை. இந்த அவமான மும், அலட்சியமும் சகஜம்தானே என்று கருதி சந்தோஷத்துடன் வீடு சென்றான். பக்கத்து வீட்டிலிருந்து கொஞ்சம் கழுநீர் வாங்கி மஹேஷுக்கு வைத்தான். பிறகு அதை உடல் பூராவும் தடவிக்கொண்டு என்னென்னமோ பேசிக்கொண்டிருந்தான்.

## 3

பங்குனி கழிந்தது. கத்திரி வெயில் ஆரம்பமாகி விட்டது. எங்கும் துளியாவது பசுமை கிடையாது. ஒரே கானல்தான். அந்தக் கானலுக்கும் ஒரு முடி வில்லைப் போலிருந்தது.

ஒரு மத்தியான நேரம், கபூர் வீட்டிற்கு வந்து கொண்டிருந்தான். அந்நியரிடம் சென்று வேலை செய்யும் பழக்கமும் அவனிடம் கிடையாது. அதுவும் இப்பொழுதுதான் நோயிலிருந்து மீண்டிருக்கிறன். தேகம் ரொம்ப பலவீனமாயிருந்தது. இருந்தும்கூட அவன் வேலைக்காக வெளியில் கிளம்பினுன். ஆனுல், வெயிலில் சுற்றி அலைந்ததுதான் கண்ட பலன்; அவன் கைக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. பசி, தாகம், களைப்பு எல்லாம் சேர்ந்து அவன் கண்களிருண்டது. வாசலில் நின்றுகொண்டு, "அமீனு, சாப்பாடு ஆகிவிட்டதா?" என்று சத்தமிட்டான்.

பெண் அறையிலிருந்து மெதுவாக வெளியில் வந்து கதவைப் பிடித்துக்கொண்டு நின்ருள்.

ஒன்றும் பதில் கிடைக்காததால் கபூர் கோபத் துடன், "சோறு ஆச்சா? என்ன சொன்னுய், ஆக வில்லையா?" என்ருன்.

"அரிசி இல்லை, அப்பா!"

"அரிசி இல்லையா? காலையில் ஏன் என்னிடம் சொல்லவில்லை?"

"ராத்திரியே சொல்லியிருந்தேன்,"

"ராத்திரியே சொல்லியிருந்தாளாம்" என்று கூறிக்கொண்டு "அரிசி எங்கிருக்கும்? நோயாளி அப்பன் சாப்பிட்டாலும் சாப்பிடாவிட்டாலும் ஒரு

நாளைக்கு மகளுக்கு நாலைந்து தடவை சாப்பிட வேணும். இன்றிலிருந்து அரிசியை அளந்து கட்டி வைத்து விடுகிறேன். தண்ணீராவது ஒரு டம்ளர் கொண்டு வா, தாகம் உயிரை வாங்குது. தண்ணீர்கூட இல்லை என்று சொல்லிவிடுகிறதுதானே?'' என்றான்.

அமீனா அவ்விதமே தலைகுனிந்துகொண்டு நின்றாள். சிறிது நேரத்திற்குப் பிறகு வீட்டில் தண்ணீர் கூட இல்லை என்பது தெரியவே கபூருக்குக் கோபம் தாங்கமுடியவில்லை. அவன் அவளருகில் சென்று 'பளீ ரென்று' ஒரு அறை கொடுத்துவிட்டு, ''சோம்பேறிக் கழுதை, காலையிலிருந்து என்ன செய்தாய்? எத்தனையோ பேர் சாகிறார்களே, நீயும் சாகக்கூடாது?'' என்றான்.

அவள் ஒன்றுமே பேசவில்லை. மண் குடத்தை எடுத்துக்கொண்டு அந்த வெயிலில் தண்ணீருக்குப் போனாள். ஆனால், அவள் சென்ற பிறகு கபூரின் இதயத்தில் அம்பு பாய்ந்ததுபோல் இருந்தது. தாயிழந்த அந்தப் பெண்ணை இதுவரையிலும் அவன் எவ்வளவு அருமையாக வளர்த்து வந்தான் என்பது அவனுக்கல்லவா தெரியும்.

அவனுடைய அருமை மகள்மேல் சிறிதும் குற்ற மில்லை என அவன் நினைத்தான். மிஞ்சியிருந்த கொஞ்சம் விதை தானியத்தையும் சமைத்துச் சாப்பிட்டு விட்டார்கள். சில தினங்களில் வெறும் காய்கறிகளை மாத்திரமே சமைத்துச் சாப்பிட்டிருக்கிறார்கள். தினம் நாலைந்து தடவை சாப்பிட்டதாகச் சொன்னதெல்லாம் சுத்தப் பொய். வீட்டில் தண்ணீர் இல்லாததற்கு காரணம்கூட அவனுக்குத் தெரிந்தது. கிராமத்தில் இருந்த இரண்டு மூன்று குளங்களும் வற்றிக்கிடந்தன. சிவசரணபாபு வீட்டுத் தண்ணீர் எல்லோருக்கும் எளிதில் கிடைக்கக்கூடியதாக இல்லை. ஏதோ சிறிது தண்ணீருள்ள குளத்திலும் கூட்டம் நிறைந்திருக்கும். முஸ்லீம் ஆனதால் அவள் அவர்கள் அருகில் கூட செல்ல முடியாது. மணிக்கணக்காக நின்று கொண்

டிருப்பதைக கண்டு யாராவது மனமிரங்கி அவளுடைய குடத்தில் தண்ணீர் நிறைத்தால்தான் உண்டு. இது அவனுக்கு தெரியும். இன்று தண்ணீர் குளத்தில் இல்லாதிருந்திருக்கலாம். அல்லது குளத்தடிச் சண்டையில் யாருமே இவளிடம் மனமிரங்காதிருக்கலாம். இம்மாதிரி ஏதாவதொன்ருனல் இவளுக்கு எங்கிருந்து தண்ணீர் கிடைக்கும்? இவ்வாறெல்லாம் எண்ணியதும் கபூர்மியாவின் கண்களில் நீர் நிறைந்தது.

இதற்குள்ளாக ஜமீந்தாருடைய ஆள் எமதூதனைப் போல் வாசலில் நின்றுகொண்டு, " கபூர் வீட்டில் இருக்கிருனு?" என்ருன்.

கபூர் மெதுவான குரலில் "உம் என்ன விஷயம்!" என்ருன்.

" பாபு கூப்பிடுகிருர்."

" இன்று சாப்பிடக்கூட இல்லை. சிறிது நேரம் கழித்து வருகிறேன்."

அந்த ஆளால் அதைப் பொறுக்க முடியவில்லை. அவன் மிக்க கேவலமாக " பார், உன்னை செருப்பால் அடித்து இழுத்துக்கொண்டுவரச் சொல்லியிருக்கிருர்." என்ருன்.

கபூர் அடுத்த கணமே தன்னை மறந்து விட்டான். அவனும் மிகக் கடுமையாக, "வெள்ளைக்காரன் ராஜ்யத்திலே யாருக்கும் பயப்படவேண்டியதில்லை. நானும் கந்தாயம் கட்டிக்கொண்டுதான் வருகிறேன். எனக்கு ஒருவரும் இனும் வீசவில்லை. நான் வரமுடியாது" என்ருன்.

உலகத்திலே அற்ப விஷயங்களைக்கூட பன்மடங்கு பெரிதாக்குவது வீணன காரியம் மாத்திரமல்ல. பெரிய ஆபத்துமாகும். இதற்குப் பிறகு என்ன நடந்தது? அதை விஸ்தாரமாகச் சொல்லவேண்டிய அவசியமே

இல்லை. ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவன் ஜமின்தார் வீட்டிலிருந்து திரும்பி வந்து வீட்டில் படுத்துக் கிடந்தான். அப்பொழுது அவனுடைய முகமும் கண்களும் சிவந்திருந்தன. அவன் தண்டனை அடைந்ததற்கெல்லாம் காரணம் "மகேஷ்" தான். அவனுடைய வீட்டைவிட்டு வெளிக் கிளம்பியதும் ஜமீன்தார் வீட்டுப் பூச்செடிகளைத் தின்றுவிட்டதாம். அதைப் பிடிக்க முயற்சிக்கையில் ஜமீன்தார் வீட்டுச் சின்னக் குழந்தையை முட்டித் தள்ளிவிட்டு ஓடிவிட்டதாம். இம்மாதிரி இதற்கு முன்பும் நடந்திருக்கிறது. அப்பொழுதெல்லாம் இவன் ஏழை என்பதற்காக மன்னிக்கப்பட்டான். ஆனால், இன்றோ ஜமீந்தாரின் குடியாக இருந்து 'வரி கொடுத்துவிட்டுத்தான் வசிக்கிறேன்; நான் யாருக்கும் அடிமையல்ல' என்று சொன்னதை ஜமீந்தாரால் சகிக்க முடியவில்லை. அங்கு அவனுக்குக் கிடைத்த தண்டனை அனைத்தையும் மௌனமாக ஏற்றுக் கொண்டான். பிறகு வீட்டிற்கு வந்ததும் பேசாமல் படுத்துக்கொண்டான். பசி, தாகம் ஒன்றும் இப்பொழுது அவனுக்குக் கிடையாது. அவன் இதயத்துள்ளே ஒரே நெருப்புப் பிடித்தெரிவதைப் போல் இருந்தது. இவ்விதம் எவ்வளவு நேரம் இருந்தான் என்பது அவனுக்குத் தெரியாது. ஆனால், வாசலில் திடீரென அவனுடைய மகளின் குரல் கேட்கவே எழுந்து வெளியே எட்டிப் பார்த்தான். வெளியில் அமீனா தரையில் விழுந்து கிடந்தாள். அவளுடைய குடம் தரையில் உடைந்து கிடந்தது. மகேஷ் நிலத்தில் தேங்கியிருந்த தண்ணீரை நாக்கால் நக்கிக் குடித்துக் கொண்டிருந்தது. கண்மூடி விழிப்பதற்குள், அவன் வீடு ரிப்பேருக்காகப் போட்டிருந்த மரச் சட்டத்தை எடுத்து மகேஷின் நெற்றியில் ஓங்கி அடித்தான்.

ஒரு முறை. ஒரே முறைதான். மகேஷ் தலை தூக்குவதற்கு முயற்சித்தது. அதன் பிறகு அதனுடைய மெலிந்த தேகம் தரையில் சுருண்டு விழுந்தது. கண்களிலிருந்து இரண்டொரு கண்ணீர்த் துளிகள் கன்னத்தில் உருண்டன. காதிலிருந்து சிறிது ரத்தம் பெரு

கியது. இரண்டு மூன்று தடவை அதனுடைய திரேகம் பூராவும் நடுங்கியது. அதன் பிறகு காலைப் பரப்பியவாறு தனது கடைசி மூச்சை விட்டுச் சென்றது.

அமீனு அழுதாள். "என்ன செய்துவிட்டாய், அப்பா. மகேஷ் செத்து விட்டதே?" என்ருள்.

கபூர் ஒன்றும் பேசவில்லை. அவன் மௌனமாக மகேஷின் விசாலமான கருங் கண்களையே பார்த்துக் கொண்டு கற்சிலைபோல் நின்றுகொண்டிருந்தான்.

சிறிது நேரத்திற்கப்புறம் சக்கிலியர்கள் வந்து மகேஷைத் தூக்கிக் கொண்டு சென்ருர்கள். அவர்களுடைய கையிலிருந்த கத்தியைப் பார்த்து கபூர் நடுங்கினுன். கண்களை மூடிக் கொண்டான். வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை.

"தர்க்கரத்னத்தை அழைத்து வரும்படி ஜமீன் தார் ஆள் அனுப்பி இருக்கிருர். பிராயச்சித்தத்திற்கு ஆகும் செலவிற்கு உன் வீடு வாசலெல்லாம் விற்ருல் கூடப் போதாது" என்று ஜனங்கள் சொன்னுர்கள்.

கபூர் இதற்கெல்லாம் ஒன்றும் பதிலளிக்கவில்லை. அவன் முழங்காலுக்குள் தலையை வைத்துக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

இரவு வெகு நேரத்திற்கப்புறம் கபூர் பெண்ணை எழுப்பி "அமீனு, எழு, நாமிங்கிருந்து போய்விடலாம்—"

அவள், கூடத்தில் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் எழுந்து உட்கார்ந்து, "எங்கே அப்பா போவது" என்ருள்.

"எங்கேயாவது மில்லுக்கு வேலைக்குப் போகலாம்."

பெண் மிகுந்த ஆச்சரியமடைந்தாள். தந்தையின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். இதற்கு முன் எவ்வளவோ பெரிய கஷ்ட காலங்களில்கூட அவன்

மில்லுக்கு வேலைக்குப் போவதற்கு இணங்கினதில்லை. அப்பொழுதெல்லாம் அவன் அங்கே தர்மம் கிடையாது. பெண்ணின் மானம் கௌரவிக்கப் படுவதில்லை'' என்றெல்லாம் சொல்லுவான்.

"நேரம் செய்யாதே அம்மா, நட. தொலை தூரம் நடக்கவேண்டியிருக்கிறது'' என்றான்.

அமீனா தண்ணீர் குடிப்பதற்கு ஒரு லோட்டாவும், தந்தை சாப்பிடுவதற்காக ஒரு பித்தளைத் தட்டையும் எடுத்தாள். ஆனால், கபூர் அதைத் தடுத்துவிட்டான். "வேண்டாமம்மா, இவைகளெல்லாம் இங்கேயே இருக்கட்டும். இவைகளைக் கொண்டு மகேஷுக்கு பிராயச்சித்தம் நடத்திக்கொள்ளட்டும்'' என்றான்.

அந்த ஆழ்ந்த இரவின் இருளிலே பெண்ணின் கையைப் பிடித்துக்கொணடு வீட்டை விட்டு வெளிக்கிளம்பிவிட்டான்.

கிராமத்தில் அவனுக்கு வேண்டியவர்கள் ஒருவரும் இல்லையாகையால் அவன் யாரிடத்திலும் சொல்லிக்கொள்ளவில்லை. வாசலைக் கடந்து வந்ததும் அவன் நின்று கொண்டு விக்கி விக்கி அழத் தொடங்கினான். நட்சத்திரங்கள் ஜொலிக்கும் இருண்ட ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு, "அல்லா! என்னுடைய மகேஷ் தாகத்தால் இறந்தது. அது மேய்வதற்கு ஒரு துளி நிலம்கூட யாரும் விடவில்லை. எனக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் சரி. ஆனால், நீ கொடுத்த புல்லையும், தண்ணீரையும் யார் அதற்குக் கொடுக்கவில்லையோ அவர்களை ஒரு நாளும் மன்னிக்கக் கூடாது'' என்று அவன் உரக்கச் சொன்னான்.

*

